மேற்கு வங்கச் சிறப்பிதழ் — II

# கல்கி

KALKI 14.8.88 ரூ. 2.

"தமிழகத் தேர்தலில்

இ.காங்கிரஸை வீழ்த்துங்கள்!"

—ஜோதிபாசு பேட்டி



"மீனு... நிலவூறும் உனதழகுக்கு உலகையே தருவேனே!"

# பிறந்த நாள் இன்று... அரும்பெரும் பரிசு ஒன்றை மீனுவுக்கு அளித்துவிட்டது ஃபேர் அண்ட் லவ்லி.

இந்த நாளுக்காகவே மீனா அரு முயற்சி எடுத்திருக்கிறாள். இரு மாத முன்னேற்பாடுகள் — அதில் முக்கியமானது ஃபேர் அண்ட் லவ்லி ஒத்துழைத்த மகிமை. அவள் மேனிமீது வெண்ணிலவைப் பொழிந்துள்ளது இதமாக, இயல்பாக. பரிசுப் பெட்டகத்தை அவளிடம் நீட்டும் ரவி, பால்நிலா முகத்தழகை பருகுகிறான் சக்கரவாகப் பறவை போல். அதை வாங்கும் மீனாவின் இதயம் பாடுகிறது நன்றிக் கீதம் — ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமுக்கு!

மீனாவைப் போலவே நீங்களும், கவனிக்கத் தக்க சிகப்பழகை அடைந்திட முடியும் ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா — இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று : சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல்



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்



கருக்கும் உள்வினையைத் தடுக்கிறது — வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.

மற்றொன்று : இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி — நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

உபயோக முறை :
கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

எளிதில் உள் உறிஞ்சப்படும் குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது.

உடலார உணருவீர் இம் மாறுதலை...பி
காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்க
இம் முகவரிக்கு :
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி அட்வைஸர், பி.ஓ. பாக்ஸ் 758, பம்பாய்-400 021.

ஃபேர் அண்ட் லவ்
சிகப்பழகு க்ரீம்




**கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியி**

# “நாடகங்களும் சினிமாக்களும் வங்க மக்களை ஏமாற்ற முடியாது...”


* கல்கத்தா விஸ்வநாதன்.

**அவ்வப்போது தமிழ் சினிமாக்களில் வந்து தலைகாட்டிச் செல்லும் கல்கத்தா விஸ்வநாதன் ஒரு தமிழர். தமது வங்க மனைவியோடு கல்கத்தாவிலேயே செட்டில் ஆனவர். கல்கத்தாவிலுள்ள புனித சேவியர் கல்லூரியில் பேராசிரியராக இருக்கும் இவர், வங்க நாடக உலகில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றவர். வங்க மொழிச் சினிமாக்களிலும் நடிப்பவர். இங்கு வங்க நாடகங்கள் — சினிமாக்கள் பற்றியும் வங்க மக்கள் ரசனை பற்றியும் விளக்குகிறார்.....**

இன்று வியாழக் கிழமை' என்று எஸ். வி. சேகர் வசனம் பேசினாலே தமிழக நாடக ரசிகர்கள் அத்தனை பேரும் விழுந்து விழுந்து சிரித்து விடுவார்கள் என்று சொல்லுவார்கள். அதெல்லாம் வங்க மக்களிடம் சுத்தமாக எடுபடாது. வங்கத்தில் நாடகங்களும் சரி, சினிமாக்களும் சரி நல்ல கதையம்சம் கொண்டதாக — அறிவுபூர்வமானதாக — மக்களின் சிந்தனைகளை உயர்த்துவதாக, இருக்க வேண்டும். அப்போதுதான் எடுபடும்.

'நகபத்' என்று ஒரு நாடகம். நகபத் என்பது ஷனாய் வாசிப்பில் ஒரு ராகம். இது திருமணத்தின் போது வாசிக்கப்படுவது. இந்த ராகம் இரண்டு பேர் ஜோடி சேருகிறார்கள் என்கிற சந்தோஷத்தை வெளிப்படுத்துவதாகவும், இந்த ஜோடி இனி வாழ்க்கையிலுள்ள அன்றாடப் பிரச்னைகளை எப்படிச் சமாளிக்கப் போகிறதோ என்ற வருத்தத்தை வெளிப்படுத்துவதாகவும் இருக்கும். இந்த ராகத்தின் பெயரைத் தலைப்பாகக் கொண்ட நாடகம் இங்கே ஏழு ஆண்டுகள் நடிக்கப்பட்டது என்றால் உங்களால் நம்ப முடிகிறதா? அந்த அளவுக்கு நல்ல கதையம்சம் கொண்ட நாடகங்களை மக்கள் பெரிதும் விரும்புகிறார்கள்.

அதே மாதிரி மேடையில் ஒரு நடிகனோ நடிகையோ சரியாக வசனம் பேசி நடிக்காமல் திணறினால் உடனே இங்குள்ள ரசிகர்கள் எங்கிருந்தாவது தவளைகளைப் பிடித்து வந்து மேடை மீது விட்டெறிவார்கள். (தமிழ்நாடு மாதிரி கல்லெடுத்து அடிக்கிற சமாசாரம் இங்கில்லை) கூடவே யாராவது ஒரு ரசிகர் ஓடி வந்து நடிக்கத் தெரியாத அந்த நடிகனிடமோ அல்லது நடிகையிடமோ நாலணாக் காசைக் கொடுத்து, 'சரியாக வசனம் பேசி நடிக்கக் கற்றுக் கொண்டு பிறகு நடிக்கவா' என்று சொல்லி அவமானப்படுத்தி விடுவார். அந்த அளவுக்கு மக்கள் இங்கே விழிப்புணர்வு பெற்றிருக்கிறார்கள்.

வங்க நாடக இயக்கத்தை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் வகை 'ஜாத்ரா'





* இது சினிமா விளம்பரமல்ல: ஜாத்ரா நாடக விளம்பரம்!

என்று சொல்லப்படும் கிராமியக் கலை நாடகங்கள். இரண்டாவது குரூப் தியேட்டர்ஸ் எனப்படும் சோதனை நாடகங்கள். மூன்றாவது புரொபஷனல் தியேட்டர்ஸ் எனப்படும் நாடகத்தையே ஒரு தொழிலாகக் கொண்டவர்களால் நடத்தப்படும் நாடகங்கள்.

இவற்றில் ஜாத்ரா என்னும் முதல் வகைக்குத்தான் இங்கு ஏக மவுசு. அதில் நடிக்கும் நாடக நடிகர் ஒருவர் மக்களிடையே செல்வாக்குப் பெற்று விட்டால் ஆறே மாதங்களில் பதினான்கு லட்சம் ரூபாய் அளவுக்குச் சம்பாதித்து விடலாம்! ஜாத்ரா என்றால் கிராமம் கிராமமாகச் சென்று நாடகம் போடும் குழு என்று அர்த்தம். இந்த நாடகத்தில் செட்டிங் என்கிற விஷயமெல்லாம் கிடையாது. ஒரு சிறு மேடை. அதற்குப் பின்னால் ஒரு திரை. அவ்வளவுதான். ஆனால் கதையம்சமும் வசனங்களும் மிகவும் முக்கியம். இப்படிப்பட்ட நாடகங்களைப் பார்ப்பதற்குப் பத்தாயிரத்திலிருந்து பன்னிரண்டாயிரம் மக்கள் வரை வந்து குவிவார்கள். சுருக்கமாகச் சொன்னால் ஜாத்ரா நாடக நடிகர்களும் நடிகைகளும் தான் இங்கே சினிமாக்காரர்களைவிடப் பற்பல மடங்கு செல்வாக்கு மிக்கவர்களாக விளங்குகிறார்கள்.

இருப்பினும் ஒரு நடிகனோ நடிகையோ மக்களிடம் எத்தனை பாப்புலாரிட்டி பெற்றிருந்தாலும் ரசிகர் மன்றம் அமைக்கிற பிசினஸெல்லாம் இங்கே கிடையாது. நடிகர்களை இந்த மக்கள் மேடைகளில் மட்டுமே பார்க்க விரும்புவார்கள்; பாராட்டுவார்கள். ஒருபோதும் அவர்களிடம் மயங்கிப் போய்விட மாட்டார்கள். அதே போல் ஒரு நடிகனோ, நடிகையோ, இங்கு அரசியலுக்கு வந்தால் மக்கள் ஏற்றுக் கொள்ளவும் மாட்டார்கள். அந்த அளவுக்கு நடிப்பையும் நிஜத்தையும் மக்கள் வித்தியாசப்படுத்திப் பார்க்கும் திறன் கொண்டவர்கள்.

பாதல் சர்க்கார் போன்றவர்களால் நடத்தப்படும் சோதனை நாடகங்களும் நல்ல வரவேற்பைப் பெறுகின்றன. தொழில் ரீதியாக நடத்தப்படும் கமர்ஷியல் நாடகங்களும் கதையம்சங்களைப் பொறுத்து வரவேற்பைப் பெறுகின்றன.

வங்க மொழிச் சினிமாக்களைப் பொறுத்தவரை ஆண்டுக்கு இருபத்தைந்து படங்கள் வெளியானாலே அதிசயம் என்றுதான் சொல்ல வேண்டும். இந்தத் தேக்கத்திற்குக் காரணம் வங்க மொழிப் படங்கள் வெளி மாநிலங்களில் எடுபடுவதில்லை என்பதுதான்! ஏனெனில், வங்க மக்கள் செக்ஸ், ஸ்டண்ட் போன்றவற்றைத் துளியும் விரும்புவதில்லை என்பதால் இவற்றைத் தவிர்த்தே வங்கப் படங்கள் எடுக்கப்படுகின்றன. இந்த இரண்டும் இல்லாவிட்டால் வெளி மாநிலங்களில் எப்படி வங்கப் படங்கள் எடுபடும்? எனவேதான் வங்கப்படங்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருக்கிறது. எண்ணிக்கை குறைவாக இருந்தாலும் சத்யஜித்ரே, மிருணாள் சென் போன்றவர்கள் வங்கப் படவுலகத்தை அகில உலக அளவுக்கு உயர்த்தியிருக்கிறார்கள் என்பது பெருமைக்குரிய விஷயம்.

வங்க மக்களிடையே செக்ஸும் ஸ்டண்டும் சுத்தமாக எடுபடாது என்றால் அவற்றையே பிரதானமாகக் கொண்ட ஹிந்திப் படங்கள் வங்கத்தில் ஓடுவது எப்படி என்று கேட்கலாம்! உண்மைதான். மற்ற மாநிலங்களில் ஓடும் அளவுக்கு இல்லாவிட்டாலும் இங்கும் ஓரளவுக்கு ஹிந்திப் படங்கள் ஓடவே செய்கின்றன. இருப்பினும் ஹிந்திப் படங்களையெல்லாம் வங்க மக்கள் அசுஸ்தோ படங்கள் — வியாதிப் படங்கள் என்றுதான் இனம் பிரித்து வைத்திருக்கிறார்கள். அந்த வியாதி தங்களைப் பீடித்துவிடக் கூடாது என்பதில் மிகவும் கவனமாக இருக்கிறார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

சுருக்கமாக வங்க நாடக இயக்கத்தோடு தமிழக நாடகங்களை ஒப்பிட்டுப் பார்த்தோமானால், தமிழகத்தில் நாடக இயக்கம் இன்று கடுமையான நோயுற்றுக்கிடக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். சினிமாவைப் பொறுத்தவரை தமிழகத்தில் எப்போதாவதுதான் நல்ல சினிமாக்கள் வெளிவருகின்றன. வங்கத்திலோ எப்போதாவதுதான் மோசமான சினிமாக்கள் வெளிவருகின்றன!

தொகுப்பு: **நமது நிருபர்கள்.**

# கல்கத்தா வாகனங்கள்



* மனிதனை மனிதன் இழுக்கும் கொடுமை!

"ஏய்யா... கட்டம் போட்ட சட்டை, முன்னால மட்டும் ஏறத்தெரியுது... டிக்கெட் வாங்கிக்கத் தெரியாதா? வந்து வாங்கிக் கிட்டுப் போய்யா..."

— இது சென்னை நகரப் பல்லவன் பஸ் களில் ஏறுபவர்கள் பலமுறை கேட்டிருக்கும் பல்லவி. இங்கே டிக்கெட் வாங்கும் பொறுப்பு பயணிகளுடையது.

கல்கத்தா நிலைமையோ தலைகீழ்! பஸ்ஸில் ஏறுகிற பயணிகள் ஹாய்யாகப் போய் உட்கார்ந்து கொள்வார்கள் அல்லது வசதியான இடத்தில் போய் நின்று கொள் வார்கள். பிறகு கண்டக்டர்தான் பயந்து பயந்து பயணியிடம் வந்து, "தாதா தாதா டிக்கடதின்..." (அண்ணே அண்ணே டிக்கெட் வாங்குங்கள்) என்று மரியாதை யாகச் சொல்லுவார்.

அதற்குப் பயணியோ, "இச்சி!" (வாங் குகிறேன்) என்று சொல்லிவிட்டுப் பேசாம லேயே இருப்பார். கண்டக்டர் போய் விடு வார்.



* படகுச் சவாரி



* டிராம்....

மறுபடியும் சிறிதுநேரம் கழித்துக் கண் டக்டர் வந்து, "தாதா தாதா..." என்று ஆரம் பிப்பார். அதற்குப் பயணி, "இச்சி தடான்னா!" (வாங்கறேன்னு சொல்றே னில்லே...) என்று எரிந்து விழுந்துவிட்டுப் பேசாமல் இருப்பார்.

மீண்டும் சிறிது நேரம் சென்று கண்டக்டர் வந்து மெதுவாக, "தாதா... தாதா..." என்று கேட்பார். அப்போதும் பயணி, "அமி ஒனேக்தூர் ஜச்சி போறேனியனபு..." (நான் தான் ரொம்ப தூரம் போறேனே... பிறகு வாங்கறேன்) என்று சர்வசாதாரணமாகக் கூறுவார். ஒருவழியாகத் தாம் இறங்கும் இடத்தில்தான் டிக்கெட் வாங்குவார் பயணி.

இத்தனைக்கும் கல்கத்தாவில் ஓடும் அர

சாங்க டவுன் பஸ்களில் குறைந்தபட்சக் கட்டணம் ஐம்பது பைசா; அதிகபட்சக் கட்டணம் அறுபத்தைந்து பைசா என்று இரண்டே இரண்டு வகைக் கட்டணங்கள் தான்.

'மினி பஸ்' என்று சொல்லப்படும் தனியார் பஸ்களில் குறைந்தபட்சக் கட்டணமே எண்பது பைசா. இந்தப் பஸ்கள் நம்ம ஊர் 'வி' சர்வீஸ்கள் மாதிரிப் பல இடங்களில் நிற்காமல் நேராகச் செல்லும். அரசாங்க பஸ்களும் சரி, மினி பஸ்களும் சரி, நம்ம ஊர் பஸ்களின் அழகுக்கும் வசதிக்கும் சிறிது கூட ஈடாகாது. ஒரே ஆறுதல் கட்டணம் பல மடங்கு குறைவு என்பது தான்!

இன்று இந்தியாவில் டிராம் ஓடும் ஒரே நகரம் கல்கத்தா மட்டுமே. டிராம் கட்டணம் படு குறைவு. முதல் வகுப்பில் (இதில் ரயில் மாதிரி காற்றாடி வசதி இருக்கும். இரண்டாம் வகுப்பில் இருக்காது. இதுதான் வேறுபாடு) நாற்பத்தைந்து பைசாவும், இரண்டாம் வகுப்பில் நாற்பது பைசாவும் வசூலிக்கப் படுகிறது. ஒரே கட்டணம்தான். எங்கு வேண்டுமானாலும் இறங்கிக் கொள்ளலாம். ஒருவேளை நீங்கள் இந்த ஸ்டாப்பில் ஏறி அடுத்த ஸ்டாப்புக்கு முன்னாடியே இறங்கிக் கொள்வீர்கள் (டிராம் மெதுவாகத் தான் போகும் என்பதால் எங்கு வேண்டுமானாலும் இறங்கிக் கொள்ளலாம்) என்றால் டிக்கெட்டே வாங்கத் தேவையில்லை. 'இதோ... அங்கே இறங்கிக் கொள்கிறேன்...' என்று கண்டக்டரிடம் சொன்னால் அவரும் பேசாமல் இருந்துவிடுவார்.

கல்கத்தாவையும் ஹௌராவையும் பிரித்து வைப்பது ஹூக்ளி நதிதான். அதைக் கடக்கும் ஒரே வழி உலகிலேயே பிஸியான தொங்கும் பாலம்தான். அதனால் பாலத்தில் ஏகப்பட்ட நெரிசல். அதைத் தவிர்ப்பதற்காகவே நதிக்கரையின் இருபுறங்களிலும் பல இடங்களில் இயந்திரப் படகுகளை இயக்குகிறார்கள். நதியைக் கடக்கக் கட்டணம் ஐம்பதே பைசாதான்.

கல்கத்தா டாக்ஸிக்காரர்களைப் பொறுத்தவரை ரயில்வே ஸ்டேஷன்களில் இருக்கும் டாக்ஸி டிரைவர்கள் நம் ஊர் மாதிரியே மொழி தெரியாமல் கல்கத்தா வரும் அந்நியர்களைச் சுலபமாக ஏமாற்றுகிறார்கள். மற்ற இடங்களில் உள்ளவர்கள் அப்படி யில்லை; ஆட்டோ மாதிரி மூன்று நான்கு ரூபாய்களே கட்டணமாகக் கூடிய குறைந்த பட்சத் தூரத்திற்குக் கூட முகம் சுளிக்காமல் வருகிறார்கள்.

மெட்ரோ என்று சொல்லப்படும் பாதாள ரயிலும் இந்தியாவில் கல்கத்தாவில் மட்டுமே ஓடுகிறது. பதினாறு கி.மீ. தூரத்திற்கு ஓடும் இதன் அதிகபட்சக் கட்டணம் ஒன்றரை ரூபாய். குறைந்த பட்சம் ஒரு ரூபாய். ரயில் பூமிக்கடியில் ஓடுகிறது என்பதால் உள்ளே முழுவதுமாகக் குளிர் சாதன வசதி செய்திருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான பேர் ஒவ்வொரு நிமிஷமும் புழங்கிக் கொண்டிருக்கும் பாதாள ரயில்களிலும் சரி, பிளாட்பாரங்களிலும் சரி, மருந்துக்குக் கூட ஒரு சிறு தூசியைக் காண முடியாதது பாராட்டுதலுக்குரிய விஷயம்.

பஸ்களாகட்டும் டிராம், ரயில்களாகட்டும் பெண்களுக்கென்று தனி இருக்கைகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன என்றாலும்பெரும் பாலும் ஆண், பெண் பேதமின்றியே எல்லா இடங்களிலும் கலந்து உட்கார்ந்து பயணம் செய்கிறார்கள். அருகருகே உட்கார்ந்து பயணம் செய்வதாலேயே இருபாலரும் உயர்ந்த நாகரிகத்தோடு நடந்து கொள்கிறார்கள்.

இத்தனை விஷயங்களையும் பாராட்டுகிற நம்மால் ஒரேயொரு விஷயத்தைத்தான் சுத்தமாகவே ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அதுதான் இன்னமும் அங்கே இருக்கும் கைரிக்ஷாக்கள். மனிதனை மனிதன் இழுக்கும் கொடுமையை எப்படியொரு கம்யூனிஸ அரசால் சகித்துக் கொள்ள முடிகிறது என்பதுதான் வியப்பாக இருக்கிறது.

— கௌசல்யா.




அடுத்த இதழுடன் 16 பக்க இலவச இணைப்பு அமரர் கல்கியின் குறுநாவல் — ஜமீன்தார் மகன்



# இலவசம்!




**பாப்பாவுக்கு ஒரு அழகிய பீங்கான் கிண்ணம்**
**-பாசத்துடன் அளிப்பது ஃபாரெக்ஸ்.**

ஒரு அழகான பயனுள்ள
பீங்கான் கிண்ணம் —
இதிலே, பாப்பா மிகவும்
விரும்பிச் சாப்பிடும்!

பாப்பாவின் சுவைமிக்க
சத்துணவு ஃபாரெக்ஸ்
ஒவ்வொரு டின்
வாங்கும்பொழுதும்
இலவசம் இந்த அழகிய
பீங்கான் கிண்ணம்.

இப்போது கிடைக்கிறது
தேர்ந்தெடுத்த
கடைகளில்!




GX/37/213 TML



# “தமிழகத் தேர்தலில் இ.காங்கிரஸை வீழ்த்துங்கள்...!”

## —ஜோதிபாசு சிறப்புப் பேட்டி

**கல்கி:** மேற்கு வங்கத்தில் டார்ஜிலிங் தவிர வேறு எந்தப் பகுதியும் சுற்றுலாப் பயணிகளைக் கவருவதாகத் தெரியவில்லை. வேறு இடங்கள் ஏதேனும் இருக்கின்றனவா? அப்படியிருந்தால் அவற்றை அபிவிருத்தி செய்ய என்ன நடவடிக்கைகளை எடுத்து வருகிறீர்கள்?

மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு: நீங்கள் சொல்வது உண்மைதான். டார்ஜிலிங்கூட இன்னும் சரியான முறையில் வெளிநாட்டவர்களிடம் பிரபலப்படுத்தப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். வந்து கொண்டிருந்த கொஞ்சம் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளும் அங்கு ஏற்பட்ட கூர்க்காலாந்துப் போராட்டத்தால் வராமல் போய் விட்டனர். இனி அப்பிரச்னை தீர்ந்து சுமுகமடையும் என்று நம்புகிறேன். டார்ஜிலிங் தவிர வெளிநாட்டவர்களையும் மற்ற மாநிலத்தவரையும் கவரும் இடம் 'சுந்தர்பான்ஸ்' எனப்படும் சதுப்பு நிலக் காடுகள். அதை இப்போது அபிவிருத்தி செய்து வருகிறோம். மற்றபடி கடலோரப் பகுதியான திகார் என்ற இடமும் சிறுசிறு குன்றுகளைக் கொண்ட பகுரா என்ற இடமும் இதுவரை மேற்கு வங்க மக்களின் பிக்னிக் ஸ்பாட்டுகளாகத்தான் இருந்து வருகின்றன. இப்போது இவற்றையும் மற்ற சுற்றுலாப் பயணிகளைக் கவரும் சுற்றுலாத் தலங்களாக அபிவிருத்தி செய்து வருகிறோம். மேலும் ஹூக்ளி நதியில் மிதக்

கும் ஹோட்டல் அமைக்கும் திட்டமும் 'சுந்தர்பான்ஸ்' காடுகளுக்குச்செல்லும்சுற்றுலாப் பயணிகளைக் கல்கத்தாவிலிருந்தே விசைப் படகுகளில் அழைத்துச் செல்லும் திட்டமும் இருக்கிறது. இவற்றையெல்லாம் சர்வதேசப் பொருளாதார உதவியுடன் செய்து வருகிறோம்.

கல்கி: மேற்கு வங்கத்தில் மின் வெட்டு இருக்கிறதா? அதற்கு என்ன காரணம்?

ஜோதிபாசு: இப்போதும் மின் வெட்டு இருக்கத்தான் செய்கிறது. கடந்த எட்டாண்டுகளில் மின் உற்பத்தியை ஆயிரத்து நானூறு மெகாவாட் அளவுக்கு அதிகரித்திருந்தாலும், தேவைகளும் கூடவே அதிகரித்துக் கொண்டு வருவதால் பற்றாக்குறையும் இருந்து கொண்டேதான் இருக்கிறது. இருப்பினும் நிலைமை முன்புபோல் இல்லை; இப்போது அபிவிருத்தியடைந்து வருகிறது. வெறும் பதினைந்து சதவிகித மின்வெட்டே இப்போது இருக்கிறது. எனினும் வீட்டு உபயோகங்களில் இன்னும் பிரச்னைகள் தீர்ந்தபாடில்லை. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டுதான் மேற்கு வங்க அரசின் திட்டக் கமிஷன் பரிந்துரை செய்த 840 மெகாவாட் உற்பத்தித் திறன் கொண்ட பக்ரேஷ்வர் அனல் மின் திட்டத்தைச் செயல்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டோம். அதற்கு மத்திய அரசு சரிவர ஒத்துழைப்புத் தரவில்லை. இதற்கிடையில் எங்களுக்குச் சோவியத் அரசு உதவ முன் வந்தது. சோவியத் உதவியை நாங்கள் ஏற்றுக் கொண்டோம். இந்நிலையில்தான் மத்திய அரசு, சோவியத் அரசிடம் மே. வங்க அரசோடு கூட்டுச் சேராமல் தேசிய அனல் மின் கழகத்தோடு சேர்ந்து பக்ரேஷ்வர் மின் திட்டத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று கூறியது. அப்படிச் செய்தால் அதன் உற்பத்தியில் முப்பத்தைந்து சதம் மின்சாரமே எங்களுக்குக் கிடைக்கும். அதன் முழு அளவும் எங்களுக்குக் கிடைக்காமல் போனால் எதிர்காலத்தில் எங்கள் பற்றாக்குறை என்பது ஆயிரத்து நூறு மெகாவாட்டாக உயர்ந்துவிடும்! எனவேதான் அதை நாங்கள் எதிர்த்து வருகிறோம். மேற்கு வங்க மக்களுக்கு மத்திய அரசு இழைக்கும் மிகப் பெரிய அநீதி இது.

கல்கி: மத்திய — மாநில அரசு உறவு குறித்த சர்க்காரியா கமிஷன் அறிக்கை குறித்து உங்கள் கருத்தென்ன?

ஜோதிபாசு: நாங்கள் ஆட்சிக்கு வந்த 77 — லேயே மத்திய — மாநில உறவு குறித்து அறிக்கையொன்றைக் கொடுத்தோம். மத்தியில் அதிகாரங்கள் குவிந்து கிடப்பது இந்தியா போன்றதொரு பெரிய தேசத்திற்கு நல்லதல்ல; மாநில அரசுகளிடம் நம்பிக்கை வைத்து அவற்றுக்குத் தேவையான நியாயமான அதிகாரங்களைக் கொடுப்பதன் மூலமே மத்திய அரசு பலம் பெற முடியுமே தவிர, மக்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் இல்லாமல் வெறும் போலீஸையும் ராணுவத்தையும் கொண்டு மத்திய அரசு தன்னைப் பலப்படுத்திக் கொள்ள முடியாது என்பதை அப்போதே சொல்லியிருக்கிறோம். இப்போதுதான் ஒருவழியாகச் சர்க்காரியா கமிஷன் அறிக்கை வெளிவந்திருக்கிறது. பொருளாதார விஷயங்கள் குறித்து எங்களுடைய பரிந்துரைகள் பல சர்க்காரியா கமிஷனால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தாலும் வேறு பல அம்சங்கள் எங்களுக்குத் திருப்தி தருவதாய் இல்லை. இப்போது பூட்டாசிங் தலைமையிலான பாராளுமன்றக் குழுவொன்று சர்க்காரியா கமிஷன் அறிக்கையை ஆராய்ந்து கொண்டிருக்கிறது. அதைத்தான் நாங்கள் மாநில அரசுகளுடன் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறோம். ஏனெனில் சர்க்காரியா கமிஷனின் அறிக்கைக்குப் பிறகும் மத்திய அரசு அதிகாரங்களைக் குவித்துக் கொண்டுதானிருக்கிறது. இதுவோர் அபாயகரமான அரசியல் சூழ்நிலையையே உருவாக்கியிருக்கிறது.

கல்கி: மாநில அரசுகள் தங்கள் அதிகாரங்களைப் பஞ்சாயத்து அளவுகளில் பகிர்ந்தளிக்க வேண்டுமென்று கலெக்டர்களைச் சந்திக்கும் பிரதமர் கூறி வருகிறாரே?

ஜோதிபாசு: இரண்டாண்டுகளுக்கு முன்பு பிரதமர் எனக்கொரு கடிதம் எழுதியிருந்தார். அதில் ராஜஸ்தான், மத்திய பிரதேசம் போன்ற மாநிலங்களில் அவர் சுற்றுப்பயணம் செய்த போது, ஏழை மக்களுக்காகச் செலவு செய்யப்பட்ட பணம் அந்த ஏழை மக்களுக்குச் சென்றடையவில்லையென்றும், அதற்கான முயற்சிகள் பஞ்சாயத்து அளவில் மேற்கொள்ளப்படவில்லையென்றும், அதற்குக் காரணம் பஞ்சாயத்துக்கள் சரிவர இயங்காததே என்றும் குறிப்பிட்டிருந்தார். அந்தக் கடிதம் குறித்து எனக்கு மகிழ்ச்சியே! காரணம், மத்திய அரசிடமுள்ள அதிகாரங்கள் மாநில அரசுகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டுமென்பதோடு, மாநில அரசிடம் உள்ள அதிகாரங்களும் பஞ்சாயத்து அளவில் பரவலாக்கப்பட வேண்டும் என்பதையும் நாங்கள் வலியுறுத்தி வருகிறோம். அந்த வகையில்தான் மேற்கு வங்கத்தில் காங்கிரஸ் ஆண்டபோது, பதினேழு ஆண்டுகளுக்கு மேலாக நடத்தப்படாமலிருந்த பஞ்சாயத்துத் தேர்தல்களையும் முனிசிபல் தேர்தல்களையும் நாங்கள் ஆட்சிக்கு வந்த பதினொரு ஆண்டுகளில் மூன்று முறை நடத்தியிருக்கிறோம். மாநில அளவில் திட்டக் கமிட்டி இருந்தால் மட்டும் போதாதென்று மாவட்ட அளவுகளிலும் திட்டக் கமிட்டிகளை நியமித்திருக்கிறோம். ஆக, பிரதமர் மாவட்டக் கலெக்டர்களைச் சந்தித்துப் பேசுவதால் அவர் சொந்த முறையில் திருப்தியடையலாமே தவிர, மற்றபடி வேறு பலன்கள் ஏதும் இருக்காது. மாநில அளவில் அதிகாரங்களைப் பகிர்ந்தளிப்பதுதான் பலனளிக்கும்.



> வங்க மக்களுக்கு மத்திய அரசு இழைக்கும் மிகப் பெரிய அநீதி இது...

கல்கி: இப்போது எதிர்க்கட்சிகள் ஒற்றுமை குறித்து முயற்சி செய்யப்படுகிறது. இந்த ஒற்றுமை என்பது முன்பு 77 — இல் நடந்தது போலவே ஆகாது என்று எப்படிக் கூற முடியும்?

ஜோதிபாசு: உண்மைதான். வெறுமனே ராஜீவ் அரசைக் குறைகூறிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. அதற்கு மாற்றான நல்ல திட்டங்களை மக்கள் முன் வைக்க இடதுசாரியல்லாத கட்சிகள் முன்வர வேண்டும். அதுதான் சிறந்த விளைவுகளை ஏற்படுத்துமேயொழியத் தனிப்பட்ட நபர்களின் தனிப்பட்ட பிரபைகள் அல்ல. இதைக் கருத்தில் கொண்டுதான் ஏற்கெனவே இடதுசாரிக் கட்சிகள் ஒரு திட்டம் தீட்டி அதைக் காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட்ட வி.பி. சிங் முதலானோரிடம் காண்பித்தோம். அவர்களும் ஒரு திட்டம் தீட்டட்டும். அந்தத் திட்டம் எங்கள் கருத்துக்கும் ஒத்ததாக இருக்கட்டும். இவற்றின் அடிப்படையில் மதச்சார்பின்மை என்ற நிபந்தனையோடு நாங்கள் அவர்களை ஆதரிக்கத் தயாராய் இருக்கிறோம்.

கல்கி: உங்கள் கட்சியே தொடர்ந்து மூன்று முறை வெற்றி பெற்றிருக்கிறது. இதற்குக் காரணம் உங்கள் கட்சிக்கு மக்களிடையே இருக்கும் செல்வாக்கா? அல்லது காங்கிரஸின் மேல் மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்புணர்வா?

ஜோதிபாசு: இரண்டும்தான்! முதல் முறையாக நாங்கள் வெற்றி பெற்றபோது எங்களுக்குக் கிடைத்தது பாஸிடிவ் வோட்டுக்கள் அல்ல; காங்கிரஸின் நெகடிவ் வோட்டுக்கள்தான் என்றார்கள். இரண்டாவது முறையும் மூன்றாவது முறையும் வெற்றி பெற்றிருக்கிறோமே! அதற்கும் நெகடிவ் வோட்டுக்களா காரணம்? ஏதோ கொஞ்சம் வோட்டுக்கள் அப்படியிருந்தாலும் பெரும் பகுதி எங்கள் கட்சிக்காகவே கிடைத்த வோட்டுக்கள்தாம்!

கல்கி: அண்மையில் நடைபெற்ற இடைத் தேர்தலில் இ. காங்கிரஸ் வெற்றி பெற்றிருக்கிறதே?

ஜோதிபாசு: அது மிகவும் குறைந்த பட்ச வோட்டு வித்தியாசம்தான். அது ஒரு பெரிய விஷயமே இல்லை.

கல்கி: டார்ஜிலிங்கில் மீண்டும் பழைய அமைதி திரும்புமா? தாங்கள் இந்தியக் குடிமக்கள்தான் என்பது எழுத்துபூர்வமாகக் கெஜட்டில் வெளிவர வேண்டும் என்கிறார், கெய்சிங். அது வெளியிடப்படாதவரை......

ஜோதிபாசு: தேர்தலில் போட்டியிடும் உரிமை பெறும் போதே இந்தியக் குடிமகன் என்பது உறுதியாகிவிடுகிறதே. பிறகு என்ன? மேற்கு வங்க மாநிலத்தை விட்டுப் பிரிந்து போகும் எந்தக் கோரிக்கையையும் அரசு ஏற்காது. நான் திரு. கெய்சிங்கிடம் பேசும்போது, 'நீங்கள் டார்ஜிலிங்கிலுள்ள வெறும் ஆறு லட்சம் நேப்பாளிகளுக்குத்தான் பிரதிநிதியாக விளங்குகிறீர்களே தவிர, மாநிலம் முழுவதும் பரவலாக இருக்கும் மற்ற நேபாளிகளுக்கு அல்ல...' என்று தெளிவாகக் கூறியிருக்கிறேன். அரசோடு நட்புறவோடு நடந்து கொண்டு டார்ஜிலிங்கைப் புனருத்தாரணம் செய்ய உதவுமாறும் கேட்டிருக்கிறேன். பார்ப்போம்! ஏனெனில் டார்ஜிலிங் பிரச்னை என்பது மேற்கு வங்கப் பிரச்னை மட்டுமல்ல; அது ஓர் அகில இந்தியப் பிரச்னை!

கல்கி: மனிதனை மனிதன் இழுக்கும் கைரிக்ஷாவை ஒரு கம்யூனிஸ ஆட்சியில் பார்த்து ஆச்சரியமடைந்தோம்!

ஜோதிபாசு: கல்கத்தாவிலுள்ள கைரிக்ஷாக்களில் ஆறாயிரம் ரிக்ஷாக்கள் மட்டுமே சட்டபூர்வமாக லைசென்ஸ் பெற்றவை. சட்டவிரோதமாக இயங்கிய முப்பதாயிரம் ரிக்ஷாக்களில் இருபதாயிரத்தை ஒழித்துவிட்டோம். மற்றவற்றையும் சிறிது சிறிதாக ஒழித்துக் கொண்டு வருகிறோம். கைரிக்ஷா ஓட்டுபவர்களில் பெரும்பாலானவர்கள் பீகாரில் வேலையேதும் கிடைக்காமல் இங்கே பிழைப்புக்காக ஓடி வந்தவர்கள். நாங்கள் அதை ஒழிக்கும்போது அவர்களுக்குக் கஷ்டம்தான் என்பதை உணருகிறேன். இருப்பினும் அவர்களுக்கு மாற்று ஏற்பாடாக இங்கே ஒன்றும் செய்ய முடியாது.

கல்கி: கல்கத்தாவில் பஸ், டிராம் கட்ட

## கண்ணைக் கவரும் வண்ணங்களில் நெஞ்சை அள்ளும் ரகங்கள்.




# பாக்ஸர்

## லுங்கிகள்
## கைக்குட்டைகள்



பாலியெஸ்டர், காட்டன், கைத்தறி மற்றும் பிரிண்டெட் ரகங்கள்

உயர்தரமான நூலைக்கொண்டு தயார் செய்யப்பட்டது.
சாயத்திற்கு உத்திரவாதம்.

**ஆரஞ்சு ஃபேஷன்**

26-A, 4வது மெயின் ரோடு, சி.ஐ.டி. நகர், சென்னை-600 035

LOTUS/OF/8108/88/Tam

**டீலர்கள் :**

* பாக்ஸர் டிரஸ் பாரடைஸ், அய்யனார் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், 235, ஆற்காட் சாலை, வடபழனி, சென்னை — 600 026. * லஷ்மி டெக்ஸ்டைல்ஸ், 24/2-A, டபுன் மால் தெரு, தெப்பகுளம், திருச்சி — 620 002. * வான்ஸ் டெக்ஸ்டைல்ஸ், கேப் ரோடு, நாகர்கோவில் — 629 001. * மம்மி டாடி, 81, கிராஸ் கட் சாலை, காந்திபுரம், கோயம்புத்தூர் — 641 012. * சிந்து, 37, மாதா பில்டிங், மெயின் ரோடு, திண்டுக்கல் — 1.



# சூரசம்ஹாரம்

**போ**தைப் பொருள்கள், கடத்தல், விற்பனை, ஈடுபட்டிருப்பவர் பெரிய தொழிலதிபர். துணிந்து கடைசி வரை எதிர்த்து நிற்கும் போலீஸ் ஆபீஸரின் கதை. கமலுக்கு க்ளோஸ் கிராப், சுருண்ட மீசை, கண்களில் கோபம், வெறி.

கமலின் தங்கை மாதுரி. மாதுரிக்குப் பார்க்கப்பட்டிருக்கும் மாப்பிள்ளை — கமலின் சக போலீஸ் ஆபீஸர் ரவி. ரவியின் தங்கை பல்லவி. பல்லவி அடிமை — போதை மருந்துகளுக்கு. பல்லவி போதை மருந்தின் காரணமாகத் தற்கொலை செய்து கொள்ள, அண்ணன் ரவி கோபமடைந்து வில்லனைத் தேடிப் போக, போன இடத்தில் வில்லன் கையால் கொல்லப்பட்டு இறந்து போக, அந்தக் கொலையை ஒரு சிறுவன் மறைந்திருந்து பார்த்து விட — சுவாரஸ்யமான கதைப் பின்னல்தான் ஆரம்பத்தில்.

தங்கைக்கு நிச்சயம் செய்யப்பட்டவன் கொல்லப்பட்டால், வில்லனைத் தேடி அண்ணன் கிளம்புவதுதான் நாகரிகம். ஸோ, வில்லனைத் தேடிப் பிடித்து, சம்ஹாரம் செய்பவர் கமல். ஜீப் துரத்தல், கார் துரத்தல், ஓடித் துரத்தல் என்று வில்லன்களைத் துரத்துகிறார். ராட்சஸ ஸ்டண்ட்கள்.

சம்ஹாரத்திற்கு ஒரு ரீல் என்றால் சிருங்காரத்திற்கு ஒரு ரீல். நினைத்தால் போதும், நிரோஷாவின் முகவாயைப் பற்றிப் பளிச்சென்று உயர்த்தி, வெகு அந்நியோன்னியமாகத் தம் முகத்தைக் குனிந்து... கமலின் கையில் நிரோஷா ரப்பர். இழுத்த இழுப்பிற்கு வளைகிறார். புரள்கிறார். நனைகிறார்!

சிரித்தே கழுத்தறுக்கும் வில்லன் பாத்திரத்தில் — ஐயோ! மறுபடியும் கிட்டுவா?

சித்ரா லட்சுமணன் டைரக்ட் செய்யும் முதல் படமாம். இடைவேளை வரை நன்றாக முறுக்கேற்றிக் கதையைக் கொண்டு போனவர் பிற்பகுதியில் கொஞ்சம் ஊஞ்சலாடி விட்டார். சாட்சிக்கு இருக்கும் ஒரே பையனை வில்லன் ஆக்ஸிடெண்ட்டில் தீர்த்துக் கட்டுவதைத்தான் சரியாகச் சொல்லவில்லையென்றால், கமலின் தங்கை மாதுரி என்ன ஆனார் என்ற விவரமும் 'காணவில்லை' டைப். இருப்பினும்—

காமிரா — கண்ணன்: அமர்க்களம்.

மியூசிக் — இளையராஜா: வெரிகுட். கூடவே சுறுசுறுப்பும் இருக்கிறது. விறுவிறுப்பும் இருக்கிறது.

— **ஜெயமன்மதன்.**

---

ணங்களெல்லாம் மிகவும் குறைவாக இருக்கிறதே, எப்படிக் கட்டுப்படியாகிறது?

ஜோதிபாசு: இங்கே கட்டணம் குறைவாக இருப்பதென்பது ஒரு பாரம்பரியம்! இந்தியாவிலேயே குறைவாக இருக்குமிடம் இதுதான். அந்த நஷ்டத்தை ஈடுகட்ட அரசு மான்யம் தருகிறது. மற்றபடி அதை உயர்த்த முடியாது. உயர்த்தினால் எதிர்க்கட்சிக்காரர்கள் சும்மா இருக்க மாட்டார்கள். காரணம், நாங்கள் எதிர்க்கட்சியாக இருந்த போதும் கட்டண உயர்வுக்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தோமே!

கல்கி: பாட்டா போன்ற கம்பெனிகளில் ஸ்டிரைக் நீடிக்கிறதே? மற்ற சில தொழிற்சாலைகளும் மூடப்பட வேண்டிய அபாயத்திலிருப்பதாக 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை தலையங்கம் எழுதியுள்ளதே?

ஜோதிபாசு: நானும் அதைப் பார்த்தேன். மிகவும் பெரிது படுத்துகிறார்கள். மத்திய அரசின் தவறான ஜவுளிக் கொள்கையினால் பம்பாயில் சுமார் அறுபதாயிரம் தொழிலாளர்கள் வேலையில்லாமல் இருக்கிறார்கள். அதையெல்லாம் ஒப்பிடும் போது இங்கு மிகமிகக் குறைவே.

கல்கி: விரைவில் பொதுத் தேர்தலைச் சந்திக்கவிருக்கும் தமிழக மக்களுக்கும், கல்கி வாசகர்களுக்கும் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

ஜோதிபாசு: தேர்தல் வரப் போகிறதா என்ன? (சிரிக்கிறார்).

கல்கி: (நாமும் சிரிக்கிறோம்).

ஜோதிபாசு: வரப் போகும் தேர்தலில் தமிழக மக்கள் இ. காங்கிரஸைத் தோற்கடிக்க வேண்டும் — வீழ்த்த வேண்டும் என்பதே எனது விருப்பம். தமிழக மக்களுக்கும் கல்கி வாசகர்களுக்கும் எனது வாழ்த்துக்கள்.

மேலட்டை வண்ணப்படங்கள், மற்றும் மேற்கு வங்கம் தொடர்பான படங்கள்:

**கே. வி. ஆனந்த்.**



# கல்கி

1988 ஆகஸ்ட் 14
மலர் 47 இதழ் 2
விபவ ஆடி 30



## ஒப்பந்தத்துக்கு ஒரு வயது

இந்தியா — இலங்கை ஒப்பந்தம் கையெழுத்தாகி ஓராண்டாகிறது. இந்திய அமைதிப்படையினர் விடுதலைப் புலிகளைத் தாக்கி ஆயுதங்களைப் பறிக்க முயல்கின்றனர். விடுதலைப் புலிகள் கண்ணி வைத்து அமைதிப்படையினரைக் கொல்கின்றனர். யுத்தம் ஒரு முடிவுக்கு வருவதாகத் தெரியவில்லை. தேர்தல் நடப்பதற்கான சூழ்நிலை உருவாகவில்லை. சகஜ வாழ்வு திரும்பவில்லை. 'போராளிகளில் ஒரு முக்கிய பிரிவினரை ஒதுக்கி விட்டுக் கையெழுத்தான இந்த ஒப்பந்தம் வெற்றி பெறுமா?' என்று ஓராண்டுக்கு முன் எழுப்பப்பட்ட கேள்வி இன்றளவும் தொடர்கிறது; இப்போதும் அர்த்தமுள்ளதாயிருக்கிறது!

நமது ராணுவத்தினரைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. அமைதிப்படையினர்' என்று பெயர் சூட்டிக் கொண்டு எவ்வாறு தீவிர யுத்தம் செய்ய முடியும்? அரசு அவ்வப்போது விடுதலைப் புலிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தி, அவர்கள் நல்ல முடிவுக்கு வர உதவ முற்படுகிறது. எனவே அமைதிப்படையும் அவர்களிடம் பரிவும் காட்டி போரும் செய்ய வேண்டியிருக்கிறது. ஆக்கிரமிப்பாளர் என்ற எண்ணம் மக்கள் மனத்தில் ஏற்பட்டு விடாமல் கவனமாக இருந்து, அவர்களின் நன்மதிப்பைப் பெறப் பாடுபட வேண்டியிருக்கிறது. சரியான இரண்டுங்கெட்டான் நிலையில் சிக்கித் தவிக்கிறது அமைதிப்படை.

ஈழத் தமிழர் பிரச்னைக்கு அரசியல் தீர்வு காண முற்படுகிறது இந்தியா — இலங்கை ஒப்பந்தம். விடுதலைப் புலிகள் மட்டும் விட்டுக் கொடுத்து, துப்பாக்கி முனையிலன்றி ஜனநாயக முறையில் நம்பிக்கை வைப்பார்களேயானால் வடக்கு, கிழக்கு மாகாணங்கள் இணையவும் தேர்தல்கள் நடக்கவும் வழி பிறக்கும். தனியான சுதந்திர ஈழ நாடு என்ற ஒரு கோரிக்கை தவிர மற்றபடி அவர்கள் சுதந்திரமாக, சுயநிர்ணய உரிமைகளுடன் தலை நிமிர்ந்து, கௌரவமாக வாழலாம். தமிழும் தமிழர் பண்பாடும் சிறப்பிடம் பெறலாம். இன்று ஈழத் தமிழனை நிம்மதியாக வாழ விடாமல் தடுப்பது விடுதலைப் புலிகளும் அவர்களுடைய ஒரு போலி கௌரவமும் பிடிவாதமுமே. தாங்கள் உயிருக்குயிராய் மதித்த ஒரு விஷயத்தை மக்களின் பொது நலன் கருதி விட்டுக் கொடுப்பதிலும் கூட ஒரு மகத்தான தியாகமும் சிறப்பான கௌரவமும் இருக்கிறது என்பதை அவர்கள் உணரவில்லை.

விடுதலைப் புலிகளைச் சமாதானப் பேச்சுக்கு வரச் செய்ய வேண்டும், ஜனநாயக மரபுகளை ஏற்கச் செய்ய வேண்டும் என்று பலரும் செய்து வரும் முயற்சிகள் தோல்வி கண்டு வருகின்றன. இன்னும் நீண்ட காலம் இந்தியப்படைகள் இலங்கையில் இருந்து வந்தால் அதற்காகும் செலவுகளை இந்தியாவினால் தாங்க முடியுமா என்பது ஒரு புறமிருக்க, அமைதிப்படையினரை 'ஆக்கிரமிப்பாளர்' என்று ஈழ மக்கள் கருதுகிற மனோபாவம் வளரக் கூடிய ஆபத்தும் இருக்கிறது. கொரில்லா யுத்தம் என்பதை முழுவதுமாக ஒரு முடிவுக்குக் கொண்டு வருவது என்பது அசாத்தியம் என்பதாகவும் பல எடுத்துக்காட்டுக்கள் மூலம் சரித்திரம் நமக்கு உணர்த்துகிறது. அதற்காக எடுத்த காரியத்தை அரை குறையாக விட்டு விட்டும் வர முடியாது. அப்படி செய்தால் விபரீத பின்விளைவுகள் ஏற்படும். அதே நேரத்தில் பேச்சு வார்த்தைகளுடன் கூடவே போரும் நடக்க வேண்டும் என்ற இப்போதைய நிலை, சீக்கிரமே ஓர் அலுப்பு சலிப்பை நமது அமைதிப் படையினரிடம் தோற்றுவிக்கக் கூடும் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

எந்த விதமாகப் பார்த்தாலும் விடுதலைப் புலிகள் இன்று வன்முறையைக் கைவிடுவதும் ஜனநாயகப் பாதைக்கு வந்து மக்கள் மன்றத்தைச் சந்திக்கச் சம்மதிப்பதும் இன்றியமையாததாகிறது. இந்த மாறுதலை அவர்களிடம் உருவாக்க மத்திய அரசு, தான் மட்டும் முயற்சிகளை மேற்கொண்டிருந்தால் போதாது. தமிழகத்தின் முக்கிய தலைவர்களை ஒருங்கிணைத்து இவ் விஷயத்தில் ஒருமுகமான கருத்தை உருவாக்க முயற்சி செய்ய வேண்டும். விடுதலைப் புலிகளின் வன்முறைக்குத் தமிழக மக்களிடமும் தமிழகத் தலைவர்களிடமும் ஆதரவு இல்லை என்பது உறுதியானால் அவர்கள் நிச்சயம் ஜனநாயகப் பாதைக்கு மாறுவார்கள். இதில் தமிழக மக்களின் பெரும்பான்மைக் கருத்து என்ன என்பது விடுதலைப் புலிகளுக்கு உணர்த்தப்பட வேண்டும். இதனை மத்திய அரசு கண்டறிய முயற்சிகளை மேற்கொள்ளட்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# வங்கமும் தமிழர்களும்

●● கல்கத்தா நகரைப் பொறுத்தவரை நம்மூர் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் தாம் முதன் முதலில் குடியேறியவர்கள் என்றாலும் மேற்கு வங்கத்திலுள்ள புருலியா மாவட்டத்தில் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே அறுபது தமிழ் வைணவக் குடும்பங்கள் குடியேறிவிட்டன. அவர்களின் சந்ததியினர் இன்னமும் அம்மாவட்டத்திலுள்ள கதிபரோ என்னும் கிராமத்தில் வசித்து வருகின்றனர்.

●● பம்பாயில் உள்ள செம்பூர், மாதுங்கா பகுதிகளைப் போலவோ தில்லியிலுள்ள கரோல்பாக் பகுதியைப் போலவோ கல்கத்தாவிலுள்ள எந்தவொரு பகுதியையும் முழுக்க முழுக்கத் தமிழர்கள் வாழும் பகுதி என்று சொல்ல முடியாது. முன்பு வேலை நிமித்தமாகச் சென்று ஹௌராவில் குடியேறிய சுமார் ஐந்நூறு தமிழ்க் குடும்பங்கள் கூட இப்போது அங்கங்கே பரவலாகச் சென்று குடியேறி விட்டன!

●● தமிழர்கள் அனைவரும் ஒரே இடத்தில் வசிக்க முடியாமல் போய் விட்டதாலோ என்னவோ, கல்கத்தாவிலுள்ள தமிழர் அமைப்புக்களும் சங்கங்களும் கூட அந்தந்த இடத்திற்கு ஒன்று என்கிற மாதிரி பலவாகப் பிரிந்து கிடக்கின்றன!



●● மே. வங்க அரசிலுள்ள சாதாரணப் பதவிகளில்தான் தமிழர்கள் இருக்கிறார்கள் என்று யாரும் நினைத்துவிட வேண்டாம். முன்பு மேற்கு வங்க அரசின் தலைமைச் செயலராக இருந்த கிருஷ்ணன் ஒரு தமிழர். இப்போது மே. வங்க அரசின் உள்துறைச் செயலராக இருக்கும் கிருஷ்ணமூர்த்தி ஒரு தமிழர்! முன்பு ஹௌராவின் கலெக்டராக இருந்து ஜி. டி. ரோட்டின் இருபுறங்களிலுமிருந்த ஆக்கிரமிப்பாளர்களை அகற்றி அந்தச் சாலையைப் பயன்படுத்தும் அனைவரது நன்றிக்கும் பாத்திரமானவர் பாலசந்திரன் என்ற ஒரு தமிழர்! இப்படி ஏராளமாகச் சொல்லிக் கொண்டே போகலாம்.

●● கல்கத்தாவுக்குச் செல்பவர்கள் அங்குள்ள தமிழர்கள் ஹோட்டல்களைக் கண்டதும் உடனடியாக ஒரு பிரியம் ஏற்பட்டுச் சாப்பிடச் சென்றுவிட வேண்டாம். அப்படிச் செல்பவர்கள் தங்கள் மணி பர்ஸ் கனமாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டு போவது நல்லது. ஒரு காப்பியின் விலை மூன்று ரூபாய். மசால் தோசை ஐந்து ரூபாய். இரண்டு இட்லி மூன்று ரூபாய்... என்று பில் கொடுக்க நேரும். தமிழ்நாட்டுப் பணியாளர்களுக்கு அக்கறை மதிப்பு!



• பாலச்சந்திரன்: ''எளிமை இந்த மண்ணின் குணம்!''

●● உங்களுக்காகக் கீழே (நாங்கள் தங்கியிருந்தது ஐந்தாவது மாடி) ஒரு நண்பர் காத்திருக்கிறார். அவர் உங்களை அழைத்துச் சென்று முதல்வர் ஜோதிபாசுவின் பத்திரிகைச் செயலாளரிடம் அறிமுகப்படுத்தி வைப்பார். அப்போது முதல்வரின் பேட்டிக்கான நேரத்தை ஏற்பாடு செய்துவிட்டு வந்து விடலாம். உடனே புறப்படுங்கள்'' என்றார் நண்பர் கா. சு. மணி. யாரோ ஒரு நண்பர்தாமே அதற்காக அத்தனை அவசரமாகக் கிளம்ப வேண்டுமா என்ற சோம்பலுடன் நாங்கள் புறப்பட்டுக் கீழே செல்வதற்கு ஏறத்தாழ இருபது நிமிடங்களுக்கு மேலாகி விட்டது. தமது காருக்குள் பொறுமையாகக் காத்திருந்த அந்த நண்பர் எங்களைக் கண்டதும் காரை விட்டுக் கீழிறங்கி வந்து தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு சந்தோஷமாகக் கை குலுக்கினார். அவர் தாம் முன்பு ஹௌரா கலெக்டராக இருந்து தற்போது மிதுனாப்பூர் மாவட்டக் கலெக்டராகப் பணியாற்றும் பாலச்சந்திரன்! நம் ஊரில் உள்ள ஒரு கலெக்டரை இத்தனை எளிமையாகப் பார்த்ததுண்டா? நமது வியப்பை அவரிடமே வெளியிட்டபோது, ''எளிமைதான் வங்க மண்ணின் தனிக்குணம். எங்கள் முதலமைச்சர் என்னைவிட எளிமையாக இருப்பார். நீங்கள்தான் பார்க்கப் போகிறீர்களே...'' என்றார் சர்வசாதாரணமாக.

— நமது நிருபர்கள்.



# நவ ஜீவன் நற்பணி மன்றம் – திருமலை-திருப்பதி.
## ஸ்ரீ வெங்கடாசலபதி கோடி நாம ஜப எழுத்து வேள்வி சில வேண்டுகோள்..

கோடி நாம எழுத்து வேள்வியில் கலந்துக் கொள்ளுங்கள். இலவசப் புனிதப் பயணமாக திருப்பதிக்கு வாருங்கள். இலவசமாக பூஜைக்குரிய வெள்ளி காக டாலர் பெறுங்கள். ஸ்ரீ ஏழுமலையானின் அருட் செல்வத்தை பெறுங்கள்.

ஸ்ரீ கலியுக கண்கண்ட தெய்வமான, வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் ஸ்ரீ வெங்கடாசலபதியின் அருட் சக்தி குறித்து யாவரும் அறிந்ததே. வாசக அன்பர்கள் மனக்கவலைகள் நீங்கி, உடல் ஆரோக்யம் பெற்று பொருட் செல்வமும் பெறும் பொருட்டு ஸ்ரீ வெங்கடாசலபதிப் பெருமானின் திவ்ய நாமங்களை பல முறை தொடர்ந்து உச்சாடனம் செய்யுங்கள். மேலும், ஏகாதசி, திருவோணம் மற்றும் சனிக்கிழமை போன்ற முக்கிய தினங்களில் ஸ்ரீ ஏழுமலையானின் திவ்ய நாமங்களை பலமுறை எழுதுங்கள்.

சில ஆலோசனைகள்:-

மேற்குறிப்பிட்ட முக்கிய தினங்களில் உங்கள் குடும்பத்தில் எழுதத் தெரிந்த ஒவ்வொருவரும் ஸ்ரீ வெங்கடேஸ்வரப் பெருமானின் திருநாமத்தை ''ஓம் நமோ வெங்கடேசாய'' என்று 1008 முறை எழுதி, திருப்பதி-திருமலையில் உள்ள எமது நவ ஜீவன் நற்பணி மன்றத்திற்கு தபால் மூலம் அனுப்பி வையுங்கள். நீங்கள் எழுதி அனுப்பும் படிவங்களை; பூஜையில் வைத்து உங்கள் சார்பாக பிரார்த்தனை செய்வித்து, ஸ்ரீ ஏழுமலையானின் பிரசாதத்தை தபால் மூலம் அனுப்பி வைக்கிறோம். இந்த கோடி நாம எழுத்து வேள்வில் கலந்து கொள்ள விரும்பும் ஆஸ்தீ கர்கள் ஸ்ரீ ஏழுமலையானின் திருநாமத்தை பக்தி சிரத்தையுடன் 1008 முறை எழுதி பூர்த்தி செய்து அனுப்பும் போது, அதனுடன் ஒரு சிறு துளசி அல்லது சிறிய புஷ்பத்தையும் சேர்த்து அனுப்ப வேண்டுகிறோம். மேலும் இயன்றவர்கள் காணிக்கையும் சேர்த்து அனுப்பலாம். மேலும் இலவசப் புனிதப் பயணம் குறித்து, போதிய விவரங்கள் அடங்கிய அச்சிட்ட படிவங்களை Printed Form ஐ இலவசமாகப் பெற, தெளிவான பின்கோடிட்ட நம்பருடன் கூடிய சுய விலாசமிட்ட ''லாங் கவரில்'' போதிய தபால்தலை ஒட்டி (மினிமம் ரூபாய் ஒன்று) கீழ் குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

**NAVJEEVAN SOCIAL WELFARE CENTRE**
**(A UNIT OF NBRC)**
**1--57, NORTH MADA STREET, NEAR SHANKAR MUTH,**
**P. O. TIRUMALA, VIA. TIRUPATI. PIN: 517504**

சில விவரங்கள்:

திருப்பதி யாத்திரை - இலவச புனிதப் பயணம்

சுமார் 100 நாட்களுக்குள் 10 ஆயிரம் ஆஸ்திகர்களை ஒன்று சேர்த்து இந்த கோடி நாம ஜப எழுத்து வேள்வியை பூர்த்தி செய்ய திட்டமிட்டுள்ளோம். கோடி நாம எழுத்து வேள்வியின் இறுதி கட்டமாக வரும் தீபாவளிப் பண்டிகையன்று (அக்டோபர் 8) குலுக்குச் சீட்டு முறையில் 108 ஆஸ்தீகர்களைத் தேர்ந்தெடுக்கப்படும். (திருப்பதியில் இருந்து அனுப்பப்படும் அச்சிட்ட படிவங்களில் எழுதி அனுப்பும் வாசகர்களிலிருந்து மட்டும்) தேர்ந்து எடுக்கப்பட்ட வாசகர்களுக்கு உடன் ரிஜிஸ்தர் தபால் மூலம் விவரம் அனுப்புவதுடன் அவர்களின் பெயர், ஊர், மற்றும் படிவத்தில் குறிப்பிட்டுள்ள நம்பருடன் பத்திரிக்கையிலும் வெளியிடுகிறோம். உங்கள் இருப்பிடத்திலிருந்து திருப்பதிக்கு வந்து செல்ல, ஏற்பாடு செய்வதுடன், யாத்திரையின் முடிவில் பூஜைக்குரிய ஒரு வெள்ளி காக டாலருடன் மஹா பிரசாதமும் இலவசமாக வழங்குகிறோம். குலுக்குச் சீட்டில் வெளிவராத (நம்பர்) அன்பர்களுக்கும் விசேஷ பிரார்த்தனை செய்வித்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.

மேற்கொண்டு விவரம் அறியவும், அச்சிட்ட படிவங்களை இல்வசமாகப் பெறவும், மேற் குறிப்பிட்ட அட்ரஸுக்கு எழுத வேண்டுகிறோம்.

''ஓம் நமோ வெங்கடேசாய.''

# க்ரேட் ஷேக் பற்றி. சில உண்மைகள் உங்களை வியப்பில் ஆழ்த்திடும்.

## க்ரேட் ஷேக். முழுமையான புரதச்சத்து ஆகார பானம்.

உலகிலேயே மிகச் செறிவான இயற்கைப் புரதச்சத்தின் மூலாதாரமான ஸோயாவிலிருந்து தயாராவது க்ரேட் ஷேக். ஏதோவொரு புரதம் நிறைந்தது அல்ல க்ரேட் ஷேக். இதில் உள்ளது, உங்கள் உடல் வளர்ச்சிக்கும், தசை வளர்ச்சிக்கும் மிகத் தேவையான உயர்தர புரதச்சத்து. இது, 22 அமினோ அமிலங்களில் 20 அமினோ அமிலங்களை, நல்ல விகிதத்தில் கொண்டது; இன்றியமையாத எல்லா 9 அமினோ அமிலங்களையும் கொண்டது.

## க்ரேட் ஷேக் விட்டமின் நிறைந்தது— மாத்திரையோ மற்றதோ இன்றியே.

B காம்ப்ளெக்ஸ் விட்டமின்கள் செறிந்தது க்ரேட் ஷேக்; அத்துடன், A மற்றும் E விட்டமின்களும். இரும்புச் சத்து, பாஸ்வரம் மற்றும் கால்சியம் ஆகிய கனிமச் சத்துக்களும் செறிந்தது.

## க்ரேட் ஷேக். ஆரோக்கியமான மாற்றுணவு

க்ரேட் ஷேக் கொழுப்புச் சத்து அற்றது. இம்மியும் கொலெஸ்டிரால் இல்லை. சிலர்க்கு அலெர்ஜியான, பண்ணைப்பாலிலுள்ள லாக்டோஸ் அற்றது இது.

## க்ரேட் ஷேக். சாப்பாடுகளுக்கிடை—யே ஒரு ஆகாரம்.

அடுத்த முறை பசிக்கும்போது, அதுவும் சாப்பாட்டு வேளை அல்லாத போது, குளுமையான க்ரேட் ஷேக் அருந்துங்கள்.

செறிவான, திருப்திதரும் இந்த ஸோயா மில்க் பானம் சுவைமிக்க பல மணங்களில் கிடைக்கிறது.




**க்ரேட் ஷேக் ஸோயா நலமிக்க ஹாயான உணவு பானம். உலகிலேயே மிகச் செறிவான புரதச்சத்தின் மூலாதாரம்.**

தயாரிப்பாளர் : நோபிள் ஸோயா ஹவுஸ் லிமிடெட்,
விநியோகஸ்தர்கள் : *கோத்ரெஜ்*

Enterprise/NS/269 Tm

'கால் பந்தாட்ட மைதானத்தில் பந்தை உதைக்கிற உதைதான் கல்கத்தா மார்க்கெட்டில் மீன் விலையை நிர்ணயிக்கிறது' என்று சொன்னால் நம்புவது கஷ்டம் தான். ஆனால் அதுதான் நிஜம்! மார்க்கெட்டில் 'சிங்கிடி' மீன் வகைக்கு யானை விலை சொன்னால் அன்றைய கால் பந்தாட்டப் போட்டியில் மோகன்பகான் அணி வெற்றி பெற்றிருக்கிறது என்றும் 'ஹில்ஸா' வகைக்குக் கிராக்கி என்றால் ஈஸ்ட் பெங்கால் அணி வெற்றி பெற்றிருக்கிறது என்றும் அர்த்தம். ஆம். மோகன் பகான் அணி ரசிகர்கள் தங்கள் வெற்றியைச் சிங்கிடி மீன் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டாடினால் ஈஸ்ட் பெங்கால் அணி ரசிகர்கள் ஹில்ஸா வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டாடுவார்கள். அந்த அளவுக்குக் கால் பந்தாட்டத்தின் மீது வங்காளத்திலுள்ளவர்களுக்கு ஒரு வெறி.

இந்த வெறிக்கு என்ன காரணம்?

அப்போதெல்லாம் கிரிக்கெட் என்பது இத்தனை பிரபலமில்லை. ஆங்கிலேயர்கள் கூடக் கால் பந்தாட்டத்தில் தான் அதிக ஆர்வம் காட்டினார்கள். அதைப் பார்த்து வங்காள மக்களும் கால் பந்தாட்டப்



# கால்பந்தாட்டத்தில் காதல் ஏன்?

ஆடிப் பழகித் தங்கள் திறமையை வளர்த்துக் கொண்டார்கள். 1911 — இல் ஆங்கிலேய அணிக்கும் இந்திய அணிக்கும் நடந்த கால் பந்தாட்டப் போட்டியில் ஆங்கிலேய அணியை இந்திய அணி மண் கவ்வச் செய்து வென்று விட்டது. வங்க மக்களுக்கு ஏக குஷி! நம்மை ஆளும் ஆங்கிலேயர்களையே தோற்கடித்தவர்கள் என்று அந்தக் கால் பந்தாட்ட வீரர்களை மிக்க மரியாதையோடு பார்த்துக் கொண்டாட ஆரம்பித்து விட்டார்கள். அதனால் அங்கு கால்பந்து விளையாடுவதும் அதைப் பார்ப்பதும் ஒரு கௌரவமான விஷயமாகிவிட்டது.

அப்படித் தோன்றியவைதாம், இன்றைக்

ருக் கல்கத்தாவில் மிகவும் பிரபலமாயுள்ள மோகன் பகான், ஈஸ்ட் பெங்கால், முகமதியன் ஸ்போர்டிங் ஆகியமூன்றுகால்பந்தாட்ட அணிகளும். நல்ல கால் பந்தாட்ட வீரர்களைக் கண்டால் இந்த மூன்று அணிகளும் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக் கொண்டு அந்த வீரர்களை, நம் ஊரில் ஜா. அணியினரும், ஜெ. அணியினரும் எம்.எல். ஏக்களைக் கடத்திக் கொண்டு போன மாதிரி எங்காவது கடத்திக் கொண்டு போய் வைத்துத் தங்கள் அணிக்கு என்று அவர்களிடம் காண்ட்ராக்ட் போட்டுக் கொள்ளுமாம்!

வங்க மக்களுக்குக் கால்பந்தாட்டத்தின் மீது ஏற்பட்ட காதலின் ஆரம்பம் தேசப் பற்றின் அடிப்படையில் ஏற்பட்டதோர் நல்ல விஷயம்தான் என்றாலும் அதன் இன்றைய வளர்ச்சி மகிழ்ச்சியளிக்கக் கூடியதாக இல்லை. காரணம் ஆட்டம் முடிந்த பிறகு வெற்றி பெற்ற அணி ரசிகர்களுக்கும் தோல்வி அடைந்த அணி ரசிகர்களுக்கும் இடையில் ஏற்படும் கலாட்டாக்களும் உயிர்ச் சேதங்களும்தான். ஒருமுறை இப்படி நடந்த கலாட்டாவில் பதினாறு பேர் உயிரிழந்தனர் என்பது எத்தனை பெரிய சோகம்!

ஒரு விளையாட்டில் எத்தனைதான் ஆர்வம் இருந்தாலும் அந்த விளையாட்டில் ஏற்படும் வெற்றி தோல்விகளையும் விளையாட்டாகவே எடுத்துக் கொள்ள வேண்டாமா? அப்படியில்லையே என்பதுதான் நமது ஆதங்கம்.

— மௌனஷ்மி.

---

அவன்: புதுசா இன்று காலையில்தான் நீங்கள் வேலையில் சேர்ந்தவர் என்பதால் கொஞ்சம் தயக்கமாக இருக்கிறது.

இவன்: பரவாயில்லை! என்ன கேட்கணுமோ கேளுங்க!

அவன்: ஒரு பத்து ரூபாய் கடன் வேணும்!

— உ. ராஜாஜி.





அவர்: என்ன ஸார், இந்த இராத்திரி வேளையில் தூங்காமல் அப்படி எதைத் தேடிக்கிட்டு இருக்கீங்க? என்ன காணாமல் போச்சு?

பெரியவர்: என் தூக்கம்தான்!

— மீனம் தனுக.

இளைஞன்: இந்த ஊரில் மத்திய அரசு தொழிற்சாலை நிறுவியதில் உங்களுக்குப் பெரும் பங்கு உண்டாமே?

அரசியல் பிரமுகர்: (பெருமையுடன்) ஆமாம் தம்பி!

இளைஞன்: என்ன, ஒரு பத்து லட்ச ரூபாய் கிடைச்சிருக்குமா?

— மணியன் தர்மலிங்கம்.



# வானதி வழங்கும் பக்தி நூல்கள்



ரூ. பை.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் அருள்வாக்குகள்
(ரா. கணபதி தொகுத்தது)

| | |
|---|---|
| தெய்வத்தின் குரல் (முதற் பகுதி) | 45.00 |
| தெய்வத்தின் குரல் (இரண்டாம்பகுதி) | 55.00 |
| தெய்வத்தின் குரல் (மூன்றாம் பகுதி) | 55.00 |
| தெய்வத்தின் குரல் (நான்காம் பகுதி) | 60.00 |

**ரா. கணபதி**

| | |
|---|---|
| அன்னையின் அன்னம் (ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றிய நூல்) | 20.00 |
| ஒரு புதிய சிவானந்தலஹரி (சிவானந்தரின் வாழ்க்கை) | 10.00 |
| ஜய ஜய சங்கரா (ஆதி சங்கரரின் வாழ்க்கைத் தத்துவங்கள்) | 22.00 |

**தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்**

| | |
|---|---|
| கம்பராமாயணம் உரை நடை | 30.00 |
| வில்லி பாரதம் உரை நடை (நான்கு பாகங்கள்) | 52.00 |

**ஆர். சங்கரநாராயணன்**

| | |
|---|---|
| நடமாடும் கடவுள் (ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் திவ்யசரிதம்) | 12.00 |
| காஞ்சிப் பெரியவர்கள் பொன் மொழிகள் | 7.00 |

**குன்றக்குடி அடிகளார்**

| | |
|---|---|
| ஆலயங்கள் சமுதாய மையங்கள் | 12.00 |

**தவத்திரு சுந்தர சுவாமிகள்**

| | |
|---|---|
| பெரியபுராணத்தில் சமுதாய நோக்கு | 10.00 |

**தெமிலி எழில் மணி**

| | |
|---|---|
| கலவையில் பிறந்த பேரொளி | 4.00 |
| தெய்வ அருட்பாடல்கள் | 3.00 |

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் அருள்வாக்கு

| | |
|---|---|
| தெய்வ வாக்கு | 20.00 |
| இந்து தர்மங்கள் | 9.00 |
| இந்து தர்ம வினா விடை | 3.00 |

**யாக்ஞவல்கியப்ரியா**

| | |
|---|---|
| இந்துமத வேதத்தின் மகிமை | 18.00 |

**திருமுருக கிருபானந்த வாரியார்**

| | |
|---|---|
| திருப்புகழ் விரிவுரை (திருப்பரங்குன்றம், திருச்செந்தூர்) | 40.00 |
| திருப்புகழ் விரிவுரை (பழனி) | 55.00 |
| திருப்புகழ் விரிவுரை (சுவாமி மலை) | 12.00 |
| கந்தரனுபூதி | 10.00 |
| கந்தரலங்காரம் | 20.00 |
| கந்தவேள் கருணை (கந்தபுராணம்) | 25.00 |
| வாரியார் விரிவுரை விருந்து | 22.00 |
| தவம் | 3.50 |
| வாரியார் வாக்கு | 7.00 |
| சிவனருட் செல்வர் (பெரிய புராணம்) | 22.00 |
| பெண்குலப் பெருமை | 20.00 |
| மங்கலமங்கையர் | 22.00 |
| வாரியார் வழங்கும் மனைவாழ்வு | 25.00 |
| திருப்புகழ் முழுவதும் (மூலம் மட்டும்) | 50.00 |

**குருபாததாசர்**

| | |
|---|---|
| குமரேச சதகம் பாடல்கள் | 4.00 |

**ராஜாஜி**

| | |
|---|---|
| ராமாயணம் | 20.00 |
| மகாபாரதம் | 20.00 |
| ஆத்மசிந்தனை | 5.00 |
| கைவிளக்கு | 12.00 |
| கண்ணன் காட்டிய வழி | 10.00 |
| பஜகோவிந்தம் | 4.00 |

* தேவையான புத்தகங்களை V.P.P.யில் பெற கடிதம் எழுதுங்கள். V.P.P. தபால் செலவு தனி.
* புத்தக வியாபாரிகள் பள்ளிகள் — கல்லூரிகள் நூல் நிலையங்களுக்குத் தக்க கழிவு உண்டு.
* வானதியின் இலவச புத்தக விலைப் பட்டியலுக்குக் கடிதம் எழுதுங்கள்.

விவரங்களுக்கு:

# வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு, (தி. நகர் தலைமை தபால் நிலையம் எதிரில்),
தி. நகர், சென்னை — 600 017. போன்: 442810

# புதிய சுவடுகள்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1988**
**ரூ.750 இரண்டாம் பரிசுக்கதை**

**அ**திகாலை ஐந்தரை மணிக்குக் கோலம் போட வெளியே வந்த அம்மா சூட்கேஸும் கையுமாக வந்து நின்ற தாரிணியைப் பார்த்து அப்படியே நின்றாள். "என்னடீ... ஒரு லெட்டர் கூடப் போடாமல்?"

ஏதோ சொல்ல வாயெடுத்த தாரிணி சுற்று முற்றும் பார்த்து, 'இங்கே வேண்டாம்,' என்பது போல் உள்ளே நுழைய, திக்திக் நெஞ்சுடன் தாய் பின்தொடர ஹாலில் விஷயத்தை உடைத்தாள் தாரிணி.

"போகச் சொல்லிட்டாங்கம்மா."

"சொல்லிட்டாங்கன்னா... யாரு?"

"என் மாமனார்... மாமியார்."

"அவரு?"

"அவரும்தான்."

"நீ எடுத்துச் சொல்லலையா?" பதறினாள்.

எதிரொலியாக வெடித்தாள். "எத்தனை நாட்கள் சொல்றது? எத்தனை லெட்டர் போட்டேன்? ஒண்ணுமே செய்யாமல் இப்படி இருந்தா?"

"என்னடீ செய்யறது? உனக்குத் தெரியாதா? அப்பாவும்தான் அலையறாரு. செருப்புத் தேயற அளவுக்குக் காசு புரளலையே? அதுக்குள்ளே அவசரப்பட்டுட்டாங்களே... என்னதான் சொன்னாங்க?"

"மூணே வார்த்தை. வந்தால் பணத்தோடு வா."

"நீ கவலைப்படாதேம்மா," என்றொரு குரல் அவள் தோளுக்குப் பின்னாலிருந்து கேட்டது.

"அப்பா நீங்க இங்கேயா இருந்தீங்க?"

"கேட்டிட்டுத்தாம்மா இருந்தேன். நீ ஒண்ணும் அலட்டிக் கொள்ளாதேம்மா. நான் இப்பவே புறப்பட்டுப் போய் மாப்பிள்ளை வீட்டுக்காரங்களைப் பார்த்துப் பேசி எப்படியாவது சமாளிக்கிறேன். நீ கவலைப்படாமல் இங்கேயே இரும்மா."

"இருக்கிறேம்பா. நான் வேறே எங்கே போவேன்?"

**தா**ரிணி தான் கடைசியாகப் பிரியாவிடை கொடுத்த தலையணையை மீண்டும் தஞ்சமடைந்தாள்.

'என் மேல் வருத்தப்படாதே தாரிணி!'

கண்ணுக்குள் நின்ற சந்திரன் சொன்னான்.

அவள் பேசாமலிருந்தாள்.

"என் மேல் தப்பில்லை" என்றான் அவன் மீண்டும்.

'சீ, போ' என்று அவனை விரட்ட முயன்றாள். விரட்ட விரட்ட அந்த உருவமும் கோழைத்தனமான அந்தக் குரலும் அவள் கண்ணிமைகளை விட்டு அகல மறுத்தன. மீண்டும் அந்தக் கசப்பான சம்பவம் அவள் கண்முன் விரிந்தது.

வழக்கம் போல் மாமியார்தான் அன்றைக்குப் பேச்சை ஆரம்பித்தாள், மகனைப் பங்கிட்டுக் கொள்ள வந்தவள் அதற்குண்டான விலையையும் சரியாகத் தரவில்லையே என்பதால் இரட்டிப்பான ஆத்திரத்துடன்.

"இப்படி ஏமாற்றிக் கொண்டே போனால்என்ன அர்த்தம்? இன்னிக்குஇரண்டில் ஒண்ணு தெரிஞ்சாகணும். எங்களுக்கும் கரையேற்ற வேண்டிய பொண்ணு இருக்கு வீட்டிலே. இதோ பாரும்மா, சந்திரனுக்குப் பிடிச்சிருந்ததேன்னுதான்இதைவிடப்பெரிய இடத்தை எல்லாம் விட்டுவிட்டு உங்க வீட்டில் சம்பந்தம் வெச்சுக்கிட்டோம். அதுக்காக இப்படியா கடன் சொன்ன ஐந்தாயிரத்தைத் தராமல் இழுத்தடிக்கிறது?

"அதானே? உங்கப்பன், என்னைச் சரியான இளிச்சவாயன்னு நினைச்சிட்டான்," என்று எழுந்து வந்தார் மாமனார். பாக்கி ஐந்தாயிரத்தையும் அப்புறம் தர்றோம்னு சொன்னப்பவே எனக்குச் சந்தேகம்தான். இருந்தாலும் மனுஷனுக்கு மனுஷன் இதுகூடச் செய்யாட்டி எப்படின்னு நினைச்சுச் சம்மதிச்சேன். இப்ப மாசம் மூணாச்சு. லெட்டர் மேலே லெட்டர் போட்டாச்சு. நேரிலேயும் போய்க் கேட்டாச்சு. ஒரு பைசா வரலே."

"அதான் மகள் கழுத்தில் தாலி ஏறியாச்சே, இனிமேல் என்ன செய்ய முடியும்னு நினைப்பு!"

"பொறுங்க அத்தை. இன்னும் ஒரு வாரம். அதுக்குள்ளே எப்படியும் புரட்டி அனுப்பிடறேன்னு அப்பா லெட்டர் போட்டிருக்கார்.

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். இதோ பாரும்மா, என் மேலே வருத்தப்படாதே. காலம் கெட்டுக் கிடக்கு. இங்கே இனி ஸ்டவ் தவறிக் கீழே விழுந்து நெருப்புப் பிடிச்சாலும் நாங்கதான் உன்னைக் கொன்னுட்டோம்னு சொல்வாங்க. நமக்குள்ளே

---

கே. பி. ஜனார்த்தனன்



"டேய் பையா, எத்தனாம் கிளாஸ்டா படிக்கிறே....?"

"அஞ்சாம் கிளாஸ் மாமா....!"

"வாத்தியார்களெல்லாம் ஒழுங்காப் பள்ளிக் கூடத்துக்கு வாராங்களாடா...?"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

---

வின் தகராறு வேண்டாம். நீ இன்னிக்கே புறப்படு. உனக்கு ரயில் டிக்கெட் எடுக்கத் தான் சந்திரன் போயிருக்கான்."

அப்போதுதான் சந்திரனை எங்கே காணோம் என்ற கேள்விக்கு விடை கிடைத்தது அவளுக்கு.

"ஆமா, நீ புறப்பட்டுடு." என்றார் மாமனார்.

கெஞ்சினாள். கதறினாள். மசிந்தார்களில்லை.

அறைக்குள் வந்தால் சந்திரன் ரயில் டிக்கெட்டோடு நின்றிருந்தான். "என் மேல் வருத்தப்படாதே தாரிணி," என்றான். "அம்மா சொல்ற மாதிரி செய்யறதுதான் சரின்னு படுது எனக்கு. உங்கப்பா இப்படி ஏமாற்றக்..."

"கூடாதுதாங்க. ஆனா அதுக்காக, நான்... என்னை... நிஜமாகத்தான் என்னைப் போகச் சொல்றீங்களா...?"

அவன் பார்வை தாழ்ந்தது. கையிலிருந்த ரயில் டிக்கெட் 'நிஜம் நிஜம்' என்று கூவியது.

இவனா உன்னைத்தான் கல்யாணம் பண்ணுவேன்னு அன்று சொன்ன ஹீரோ? கனவில் வந்த ராஜகுமாரன்?

"என் மேல் தப்பில்லை," என்றான் சந்திரன். "அன்னிக்குப் பெண் பார்க்க வந்தப்போ உன்னைத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு சொன்னது வாஸ்தவம் தான். அந்தச் சமயத்தில் ஒரு சிங்கிள் பைசா வரதட்சணை தரமாட்டேன்னு சொன்னால் கூட எங்கப்பா அம்மாவோடு போராடி உன்னைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பேன். ஆனா உங்கப்பா முப்பது பவுன் நகை போடறேன்னார். பத்தாயிரம் ரூபாய் தர்றேன்னார். அப்படிச் சொன்னவர் இப்படி ஏமாத்தினா எப்படி? முடியாததை ஏன் தர்றதாச் சொல்லணும்? இதைப் பாரு. நான் விட்டுடத் தயார். ஆனால் ஏமாறத் தயாரில்லை. இதை நீ நல்லாப் புரிஞ்சுக்கணும்."

அவளுக்குப் புரிந்தது. அவனுக்கு அவன் உணர்ச்சிகளே முக்கியம். அவளுடையவை?

"புரியுதுங்க. உங்க தங்கை கல்யாணத்தில் எனக்கும் பொறுப்பு இருக்குதுங்க. எங்கேயாவது எனக்கு ஒரு வேலை கொடுங்க. பத்துப் பாத்திரம் தேய்ச்சாவது எங்கப்பா தரவேண்டிய பணத்தை நான் படிப்படியாத் தர்றேன். வீட்டுக்கு மட்டும் போகச் சொல்லாதீங்க, ப்ளீஸ்."

அவன் மெள்ளக் கிட்டத்தில் வந்தான். ஆறுதலாய்த் தோள்களைத் தடவினான். "நீ என்ன அங்கேயேவா இருக்கப் போறே? உன்னை அனுப்பி வெச்சாத்தான் உங்கப்பா பணத்தைக் கீழே வெப்பாரு. அப்புறம் நீ வந்திடப் போறே. இதைப் போய் நமக்குள்ளே ஒரு பிளவா நீ எடுத்துக்காதே. நீயும் நானும் இதிலே ஒரே ஸைடு."

அவ்வளவும் சொல்வதற்குள் அவனுக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கிற்று. இப்போது அவன் இன்னும் கேவலமாகத் தெரிந்தான். கோபத்தில் அவளை விரட்டியிருந்தால் கூட ஏதேனும் ஒரு தளத்தில் வைத்து அவனைப் புரிந்து கொண்டிருப்பாள்.

இவன் கோழை. சபலத்திலும் நிர்ப்பந்தத்திலும் காரியமாற்றுபவன். அதனால் தான் பெண் பார்க்க வந்த இடத்திலும் அப்படி நடந்து கொண்டான். இப்போதும் இப்படி நடந்து கொள்கிறான். அப்போது சபலம். இப்போது நிர்ப்பந்தம். அப்போது சபலத்தைக் காதல் என்று புரிந்து கொண்டது எப்படி தவறோ அது போலவேதான் இப்போது நிர்ப்பந்தத்தைச் சாமர்த்தியம் என்று நினைப்பதும். இவன் கோழை. நிர்ப்பந்தங்களுக்குப் பணிகிறவன். பணிந்து மனைவியைக் கைவிடுகிறவன். இதோ கைவிட்டும் விட்டான்.

அவள் சூட்கேஸை எடுத்தாள். "நான் துணியை எடுத்து வைக்கிறேன்", என்றவனை எரித்து விடுவது போலப் பார்த்தாள்.

அப்பா மறுநாளே புறப்பட்டுப் போனார் மாப்பிள்ளை வீட்டுக்கு. போய்ப் பிரயோஜனமில்லை என்று அவளுக்குத் தெரியும். என்றாலும் தடுக்கவில்லை.

திரும்பி வந்தவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

"என்னங்க சம்மதிச்சிட்டாங்களா?"

"எங்கே? அவங்களுக்கு ஒண்ணும் அவசரமில்லையாம். தாமதமாகிற காலத்துக்குண்டான வட்டியும் சேர்த்து அவளை எப்ப வேணுமின்னாலும் அனுப்பி வைக்கலாமாம்."

"சே, சரியான பணப் பிசாசுங்க."

"நீ கவலைப்படாதேம்மா," என்றார் இவளிடம்.

"நான் கவலைப்படலேப்பா", என்றதை அவர்கள் நம்பவில்லை.

அடுத்த வாரம் பெங்களூரிலிருந்து சித்தப்பா வந்தார். அப்பாதான் கடிதம் எழுதி வரவழைத்திருக்க வேண்டும். அவரை மத்யஸ்தத்துக்கு அனுப்பி வைத்தார்கள். ஏமாற்றம்.

"அவங்க ரொம்ப பிடிவாதமாக இருக்காங்க. நம்மாலே முடியாதுப்பா. நீ எப்படியாவது பணத்தைப் புரட்டப் பார்", என்று சொல்லி விட்டு, 'எங்கே நம்மிடம் கேட்டு விடப் போகிறாரோ,' என்று அவசரமாகப் புறப்பட்டார்.

அப்புறம் ஊரிலிருந்து பெரியப்பா.

சென்னையிலிருந்து மாமா. ஏன், கல்யாணம் பேசின தரகரைக் கூட விட்டு வைக்கவில்லை அப்பா.

தாரிணி எதிர்பார்ப்புக்களைக் கண்ணில் தேக்கி மௌனமாகப் பார்த்தவாறிருந்தாள்.

எல்லாருக்கும் தோல்வியே ஏற்பட்டது. ஓரிருவர் திரும்பி வந்து அவர்கள் பக்கத்து நியாயத்தைப் பேச ஆரம்பித்து விட்டனர்.

''ஏம்பா, மகாதேவன், என்னிக்கிருந்தாலும் நீ கொடுக்க வேண்டிய தொகைதானே? இப்ப கொடுத்திடறதுதான் நல்லது. கொடுக்கிற வழியைப் பாரு.....''

எரிமலையாக வெடித்தார் மகாதேவன்.

''ஆமாய்யா, சொன்னேன். அதுக்காக? ஒரு மனுஷனுக்குப் பணமுடை வராதா? வியாபாரத்திலேயே கடன் வெக்கிற போது ஒரு கல்யாண விஷயத்தில் கொஞ்சம் பொறுத்துக்கக் கூடாதா?''

அம்மாவும் ஒத்துப்பாடினாள். கொஞ்ச நாட்களாய் அவள் போக்கிலும் ஒரு மாறுதல். வேளைக்கு வேளை தாரிணியைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தவள் இப்போது வேளை கிடைத்தபோதெல்லாம் அவளை இடித்துக் காட்டத் தயங்கவில்லை.

''உனக்கும் கொஞ்சம் சாமர்த்தியம் வேணும்டி. இரண்டு மாசம் அந்த வீட்டில் இருந்திருக்கே. புருஷனைக் கையில் போட்டுக்கத் தெரியலையே...?''

''நான் என்ன....?'' வாய் வரை வந்த வார்த்தைகளை அடக்கிக் கொண்டாள். ''புருஷனைக் கைக்குள்ளே போடறதா? அதுக்காகவாம்மா நான் கல்யாணம் பண்ணிக் கொண்டேன்? அப்படி அவரைக் கையிலே போட்டுக் கொண்டு அவரோட வாழ்ந்து கிடைக்கிற சுகத்தை எப்படிம்மா மனசிலே உறுத்தாம அனுபவிக்க முடியும்? .....ம், உனக்குப் புரியாது.''

நேரம் போகாத போது விட்டுப் போன பிளஸ் டூ சப்ஜெக்டை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள். பரீட்சைக்கும் அப்ளிகேஷன் போட்டாள்.

ஆறு மாதம் ஓடி விட்டது.

பரீட்சை எழுதிய சென்டரிலிருந்து ரிசல்டை வாங்கிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தவள் அம்மாவும் அப்பாவும் குசுகுசுவென்று பேசிக் கொண்டிருக்கவே நுழையத் தயங்கினாள்.

இருந்தாலும் காதில் விழாமலில்லை.

அதாங்க நானும் நினைச்சேன். மாசம் ஆறாச்சு. இப்படியே விட்டு வைத்தால் அப்புறம் சின்னவள் கல்யாணத்துக்கு அதுவே ஒரு இடைஞ்சலாயிடும் பாருங்க.''

''ஆமா, வசந்தி கல்யாணத்துக்கு அந்தத் தொகையை ஒதுக்கிடலாம்னுதானே இவங்ககிட்டே கடன் வெச்சேன்? பொண்ணு பார்க்க வந்தப்போ அப்படி வாயைப் பிளந்தானேன்னு ஒரு விளையாட்டு விளையாடிப் பார்த்தேன்.''

''அவனைச் சொல்லிக் குத்தமில்லேங்க. துப்புக் கெட்ட பொண்ணு. வளைச்சுப் போட்டுக்கத் தெரியலே... அவ வெளியே போயிருக்கா. வந்ததும் பணம் புரட்டிட்டதாச் சொல்லுங்க. இன்னிக்கே பாங்கிலிருந்து எடுத்துக் கொடுத்திடுங்க.''

''ஹூம், ஐயாயிரம் ரூபாய். ஐந்நூறு ரூபாய் வட்டி வேறே தரணும். நமக்கு நஷ்டம்தான்.''

'எப்பம்மா வந்தே'வுக்கு ''இப்பத்தான்'' என்றாள் தாரிணி.

''உனக்கு ஒரு சந்தோஷச் செய்தியம்மா. நீ நாளைக்கே உன் புருஷனோட போய்ச் சேர்ந்துக்கப் போறே. அவங்க கேட்ட தொகையை ஒருவழியாப் புரட்டிட்டேன்.''

''என்னங்க, குழந்தைகிட்டே போய் நீங்க பட்ட பாட்டையெல்லாம் சொல்லிக் கொண்டு! நீ துணிமணியெல்லாம் எடுத்து வைம்மா. இந்தாங்க, நீங்க மாப்பிள்ளைக்குத் தந்தி கொடுங்க.''

''வேண்டாம்பா. நானே புறப்பட்டுப் போய்க்கறேன். நீங்க டிக்கட் எடுத்து வாங்க.''

துணிகளை எடுத்து அடுக்கினாள். ஸ்டேஷன் வரை சென்று ரயிலேற்றி விட்டு வந்தார் அப்பா.

இரண்டு மாதங்கள் பொறுத்து ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை.

''என்னை மன்னிச்சிடுங்க மாமா'', என்றவாறே வாசலில் தயங்கிய மருமகனைப் பார்த்து விழித்தார் மகாதேவன்.

''தாரிணியைத் திருப்பி அனுப்பி வெச்சது தப்புத்தாங்க. நான் நல்லா உணர்ந்திட்டேன். அவங்களுக்கு எப்படியோ, அவள் இல்லாமல் வாழ என்னால் முடியலே. அவளை அழைச்சிட்டுப் போகத்தான் வந்திருக்கேன்.''

''அழைச்சிட்டுப் போகவா? அப்ப தாரிணி... தாரிணி அங்கே வரலையா? ஐயோ லக்ஷ்மி தாரிணி நம்மை மோசம் பண்ணிட்டுப் போயிட்டாளே... லெட்டர் வரலைன்னதுமே சந்தேகப்பட்டேன்.''

அம்மா அழத் தொடங்கினாள்.

அப்பா தாரிணியின் தூசி படிந்த மேஜையைப் புரட்டினார். இழுத்த டிராயருக்குள் எடுத்த டிராப்ட் அனாதையாகக் கிடந்தது, ஆறு மாதமே செல்லுபடியாகும் என்ற வாசகத்துடன் அந்த ஐயாயிரம் ரூபாய் டிராப்ட்.

கூடவே ஒரு குறிப்பும் இருந்தது.

'அப்பா அம்மாவுக்கும் (தேடி வந்தால்) கணவருக்கும்....

உங்களைப் போலவே பணத்தையும் வாழ்க்கையையும் முடிச்சுப் போட என்னால் முடியவில்லை. இந்த லெட்டரை நீங்கள் படிக்கும் போது நான் எங்காவது ஓர் அனாதை ஆசிரமத்தில் செவிலித்தாயாகப் பணிபுரிந்து எனக்கு அன்னியமில்லாத நெஞ்சங்களுடன் வாழ்ந்து கொண்டிருப்பேன்....

— தாரிணி.

துப்பறியும்

# சூர்யா–கிரண்

நவின் பிரதாப் முல்விக்

போன வாரம்தான் கமிஷனர் ஜோஷி கல்தானின் மாளிகையைச் சோதனையிட்டிருந்தார்.

மூலை முடுக்கு ஒன்று விடாமல் தேடுங்கள்!

ஆச்சர்யம்! கடத்தல் பொருள் ஒன்று கூடக் காணோமே!

கல்தான் எங்கே? கண்டுபிடியுங்கள்!

அதோ! ஹெலிகாப்டரில் தப்பிக்கப் பார்க்கிறான்!

பின்துரத்துங்கள் அவனை!



போலிஸ்

ஒரு கப்பலுக்குப் பக்கத்தில் கடலில் குதித்து விட்டான்.

சில காகிதங்களைக் கடலில் எறிந்து விட்டான்!

2

(தொடரும்)



# பொன்னியின்

## அத்தியாயம் 30
## இரு சிறைகள்

வானதியை விட்டுப் பிரிந்ததும் அரசிளங் குமரி நேரே பழையாறைச் சிறைச்சாலைக்குச் சென்றாள். காவலர்களை வெளியிலேயே நிறுத்தி விட்டுத்தான் மட்டும் வந்தியத்தேவன் அடைபட்டிருந்த இடத்துக்குப் போனாள். அவன் தனி அறையில்பூட்டப்பட்டிருந்தான். சிறையின் உச்சி மோட்டைப் பார்த்துக் கொண்டு உற்சாகமாகத் தெம்மாங்கு பாடிக் கொண்டிருந்தான்.

"வானச்சுடர்கள் எல்லாம்
மானே உந்தனைக்கண்டு
மேனி சிலிர்க்குதடி —
மெய்மறந்து நிற்குதடி!"

குந்தவை அருகில் வந்து நின்று தொண்டையைக் கனைத்த பிறகுதான் அவளைத் திரும்பிப் பார்த்தான். உடனே, எழுந்து நின்று, "வருக! வருக! இளவரசியே! வருக! ஆசனத்தில் அமருக!" என்று உபசரித்தான்.

"எந்த ஆசனத்தில் அமரட்டும்?" என்று இளவரசி கேட்டாள்.

"இது தங்கள் அரண்மனை. இங்கு நடப்பது தங்கள் ஆட்சி; தங்கள் ஆணை. இங்குள்ள சிம்மாசனம் எதில் வேண்டுமானாலும் தங்கள் விருப்பம் போல் அமரலாம்!" என்றான் வல்லவரையன்.

"ஐயா! உமது முன்னோர்கள் ஆணை செலுத்தி மூவுலகையும் ஆண்டபோது வல்லத்து அரண்மனை இவ்விதந்தான் இருந்தது போலும். எங்கள் நகரில் இந்த இடத்தைச் சிறைச்சாலை என்று சொல்லுவார்கள்" என்றாள் இளவரசி.

"அம்மணி! எங்கள் ஊரில் இப்போது அரண்மனையும் இல்லை; சிறைச்சாலையும் இல்லை. பல தேசத்து அரசர்களுமாகச் சேர்ந்து அரண்மனை, சிறைச்சாலை எல்லாவற்றையும் இடித்துத் தரை மட்டமாக்கி விட்டார்கள். நூறு வருஷங்களுக்கு முன்பு!....."

"ஏன்? ஏன்? வல்லத்து அரண்மனை மீதும் சிறையின் பேரிலும் அவர்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?"

"எல்லாம் ஒரு கவிஞரால் வந்த வினை!"

"ஆ! அது எப்படி?"

"என் குலத்து முன்னோர்கள் தென்னாட்டின் பேரரசர்களாக அரசு புரிந்தநாளில், காலா காலத்தில் கப்பம் செலுத்தாத அரசர்களை அதிகாரிகள் சிறைப்பிடித்துக் கொண்டு வருவார்கள். அரண்மனை முற்றத்தின் இரு புறத்திலும் அந்த அரசர்களை அடைத்து வைக்கும் சிறைகள் இருந்

அமரர் கல்கி





# செல்வன்

மணியம்

தன. சக்கரவர்த்தி கருணை புரிந்து எப்போது தங்களை வரும்படி சொல்லி அனுப்புவார், மன்னிப்புக் கேட்டுக் கொண்டு ஊருக்குத் திரும்பலாம் என்று அச்சிற்றரசர்கள் காத்திருப்பார்கள். பேரரசரைக் காணும் பேறு அவர்களுக்கு எளிதிலே கிட்டாது. அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கவிஞர்களும் புலவர்களும் சக்கரவர்த்தியின் ஆஸ்தான மண்டபத்துக்குப் போவார்கள். சக்கரவர்த்தி முன்னிலையில் பாடல்களைச் சொல்லிப் பரிசுகள் பெற்றுக் கொண்டு திரும்பிச் செல்லுவார்கள். அப்போது சிறையில் காத்திருக்கும் சிற்றரசர்கள், 'அடாடா! இந்தப் புலவர்களுக்கு வந்த யோகத்தைப் பார்! இவர்கள் கொண்டு போகும் பரிசுகளைப் பார்!' என்று சொல்லி வியப்பார்கள். 'ஓகோ! இந்தப் புலவன் கொண்டு போவது என் வெண்கொற்றக் குடையல்லவா!' என்பான் ஓர் அரசன். 'அடடா! இந்தக் கவிஞன் என் சிவிகையில் அமர்ந்து போகிறானே!' என்பான் இன்னொரு வேந்தன். 'ஐயோ! என் பட்டத்து யானையை இவன் கொண்டு போகிறானே!' என்பான் இன்னொரு மன்னன். 'இது என் குதிரை! இந்தக் கவிராயனை என் குதிரை கட்டாயம் ஒரு நாள் கீழே தள்ளிவிடும்!' என்று சொல்லி மகிழ்வான் வேறொரு சிற்றரசன். எல்லாப் புலவர்களுக்கும் கடைசியில் இன்னொரு புலவர் வந்தார். அவர் சிறையிலிருந்த சிற்றரசர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டார். கேட்டுக் கொண்டே சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்குச் சென்று இந்தப் பாடலைச் சொன்னார்.

'என் கவிகை என் சிவிகை
  என் கவசம் என் துவசம்
என் கரியீது என் பரியீது
  என்பரால் — பன் கவள
மாவேந்தன் வாணன்
  வரிசைப் பரிசு பெற்ற
பாவேந்தரை வேந்தர்
  பார்த்து!'

இவ்விதம் அந்தப் புலவர் பாடிய பாடல் தமிழ்நாடெங்கும் அப்பாலும் பரவி விட்டது. மக்கள் அடிக்கடி பாடியும் கேட்டும் மகிழ்ந்தார்கள். இதனால் எங்கள் இராஜ்யத்துக்கே ஆபத்து வந்துவிட்டது. எல்லா அரசர்களுமாகச் சேர்ந்து வந்து படையெடுத்து எங்கள் ஊரையும், அரண்மனையையும், சிறைச்சாலையையும் எல்லாவற்றையும் அழித்து விட்டார்கள்..."

"எல்லாவற்றையும் அழித்தாலும் அந்தக் கவியின் பாடலை அழிக்க முடியவில்லையல்லவா? உங்கள் குலம் பாக்கியம் செய்த குலந்தான்! அதன் புகழ் என்றும் நிலைத்து நிற்கும்!"

"வாணர் குலத்தின் வீரப் புகழைக் கெடுக்க நான் ஒருவன் இப்போது ஏற்பட்டிருக்கிறேன்..."

"ஆகா! அந்த உண்மையை நீரே ஒப்புக் கொள்கிறீர் அன்றோ?"

"ஒப்புக்கொள்ளாமல் வேறு என்ன செய்வது? அடிமைத் தனங்களுக்குள்ளே பெண்ணடிமை மிகப் பொல்லாதது. ஒரு பெண்மணியின் வார்த்தையைக் கேட்கப் போய், என் முன்

னோர்களின் குலப் புகழுக்கு நான் மாசு தேடிக் கொள்ள நேர்ந்தது. ஓடி ஒளிந்து மறைந்து திரிந்து உயிர் வாழ நேர்ந்தது. என் கோபத்தையெல்லாம் அந்த வைத்தியர் மகனைக் கொன்று தீர்த்துக் கொள்ளலாம் என்று பார்த்தேன். அதற்கும் ஒரு தடை வந்து குறுக்கிட்டு விட்டது...''

''ஐயா! வைத்தியர் மகன் பினாக பாணி மீது உமக்கு ஏன் அவ்வளவு கோபம்?''

''கோபத்துக்கு வேண்டிய காரணம் இருக்கிறது. நல்ல ஆளைப் பிடித்து என்னோடு கோடிக்கரைக்கு அனுப்பினீர்கள். அவன் என் காரியத்தையே கெடுத்துவிட இருந்தான். அதுபோகிற தென்றால், சற்று முன் இந்த ஊர் வீதியில் அவன் என்னைப் பகைவர்களின் ஒற்றன் என்று சொல்லிப் பழுவேட்டரையர்களிடம் பிடித்துக் கொடுக்கப் பார்த்தான். அங்கிருந்து தப்பி வந்தால், அரண்மனை முற்றத்தில் ஆயிரம் பதினாயிரம் பேருக்கு எதிரில் என்னைப் 'பழுவூர் ராணியின் ஒற்றன்' என்று அவன் குற்றம் சாட்டினான்......''

''வல்லத்து இளவரசரே! அது உண்மையல்லவா?''

''எது உண்மை அல்லவா?''

''நீர் பழுவூர் ராணி நந்தினி தேவியின் ஒற்றன் என்று பினாகபாணி குற்றம் சாட்டியதைக் கேட்கிறேன். உண்மையைச் சொல்வீரா?''

''நான் உண்மை சொல்லுவதில்லையென்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறேன், தேவி!''

''ஆகா! அது என்ன விரதம்? அரிச்சந்திர நதிக் கரையில் பழுவூர் ராணியைப் பார்த்ததிலிருந்து அப்படிப்பட்ட விரதம் எடுத்துக் கொண்டீரா!''

''இல்லை, இல்லை! அதற்கு முன்னாலேயே அந்த முடிவுக்கு வந்து விட்டேன். நான் உண்மைக்கு மாறானதைச் சொல்லிக் கொண்டிருந்த வரையில் எல்லாரும் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஓரிடத்தில் வாய் தவறி 'இளவரசர் நாகைப்பட்டினத்தில் பத்திரமாயிருக்கிறார்' என்று சொன்னேன். ஒருவரும் நம்பவில்லை. கேட்டவர்கள் எல்லாரும் சிரித்தார்கள்...''

''எவ்வளவு தவறான காரியத்தைச் செய்தீர்? உம்முடைய வார்த்தை



யை அவர்கள் நம்பாததே நல்லதாய்ப் போயிற்று; நம்பியிருந்தால் எவ்வளவு பிசகாகப் போயிருக்கும்?''

''இனிமேல் எப்போதும் இத்தகைய தவறுகள் நேரவே நேராது......''

''உமது வாக்குறுதிக்கு மிக்க நன்றி.''

''என்ன வாக்குறுதி கொடுத்தேன்?''

''இனிமேல் தவறு எதுவும் நேராமல் நான் இட்ட காரியத்தைச் செய்வதாக...''

''கடவுளே! அப்படி நான் ஒன்றும் வாக்குறுதி கொடுக்கவில்லை.போதும்! போதும்! என்னை இந்தச் சிறையிலிருந்து விடுதலை செய்து விடுங்கள்! என் வழியே போகிறேன்.....''



''அப்படியானால், உமக்கு விடுதலை கிடையாது. இந்தச் சிறையிலேயே நீர் இருந்து வர வேண்டியது தான்'' என்றாள்.

வந்தியத்தேவன் கலகலவென்று சிரித்தான்.

''நீர் எதற்காகச் சிரிக்கிறீர்? நான் சொல்லுவது வேடிக்கை என்றா?''

''இல்லை, தேவி! இந்தச் சிறையிலிருந்து தாங்கள் என்னை விடுதலை செய்யாவிட்டால், நான் இதிலிருந்து தப்பிச் செல்ல முடியாதா?''



ளவரசி ஒரு கணம் வந்தியத்தேவனைத் தன் மலர்ந்த கண்களினால் உற்றுப் பார்த்துவிட்டு,

''ஐயா! நீர் கெட்டிக்காரர். அதிலும் சிறையிலிருந்து தப்பிச் செல்வதில் மிகக் கெட்டிக்காரர். பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையிலிருந்து தப்பிச் சென்றவருக்கு இது ஒரு பிரமாதமா?'' என்றாள்.

''அப்படியானால், நீங்களே கதவைத் திறந்து என்னை விடுதலை செய்யுங்கள்.''

''நானே இந்தச் சிறையைத் திறந்து விடலாம். அல்லது நீரும் தப்பிச் செல்லலாம். ஆனால் இன்னொரு சிறைச்சாலையிலிருந்து நீர் தப்ப முடியாது.....''

''சின்னப் பழுவேட்டரையரின் பாதாளச் சிறையைச் சொல்கிறீர்களா?''

''இல்லை; அதுவும் உமக்கு இலட்சியமில்லை. பாதாளச் சிறை வாசலில் காத்திருக்கும் புலிகளையும் வென்று விட்டுத் தப்பிச் சென்று விடுவீர்....''

''பின்னே, எந்தச் சிறையைச் சொல்லுகிறீர்கள்?''

''என்னுடைய இதயமாகிற சிறைச் சாலையைத்தான் சொல்கிறேன்.''

''தேவி! நான் வீடு வாசல் அற்ற அனாதை. என்னுடைய குலப் பெருமையெல்லாம் பழைய, கதை:

கவிஞர் கற்பனை. தாங்களோ, மூன்று உலகையும் ஒரு குடை நிழலில் ஆளும் சக்கரவர்த்தியின் செல்வக் குமாரி....."

"யார் கண்டது? இந்தச் சோழ குலத்தின் பெருமையும் ஒருநாள் பழைய கதை ஆகலாம்."

"ஆயினும், இன்றைக்குத் தாங்கள் இந் நாட்டில் இணையற்ற அதிகாரம் படைத்தவர். சக்கரவர்த்தியும் பழுவேட்டரையர்களும் முதன் மந்திரியும் தங்கள் விருப்பத்துக்கு மாறாக நடக்கத் துணிய மாட்டார்கள்...."

"இதெல்லாம் உண்மையாயிருந்தால், நீர் மட்டும் எவ்விதம் என் அதிகாரத்தை மீற முடியும்?"

"அரசாங்க அதிகாரம் வேறு விஷயம். தாங்கள் நெஞ்சின் அதிகாரத்தையல்லவா குறிப்பிட்டீர்கள்?"

"அதிலேதான் என்ன தவறு?"

"நம் இருவருக்கும் அந்தஸ்திலே உள்ள வித்தியாசம்தான் தவறு...."

"'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்ற முதுமொழியைக் கேட்டதில்லையா?"

"அந்த முதுமொழி பொன்னியின் செல்வருக்கும் படகுக்காரி பூங்குழலிக்கும் கூடப் பொருந்துமல்லவோ?"

"ஆம்; பொருந்தும்தான்! என் தம்பி உலகமாளப் பிறந்தவன் என்று நினைத்தேன். அதனால் அவர்களுடைய நெஞ்சுக்கும் தாளிட விரும்பினேன்....."

"நானும் இளவரசரைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டுவிட்டுத்தான் ஆவலுடன் வந்தேன். அவரோடு எட்டுத் திசைகளுக்கும் சென்று போர்க்களங்களில் வீரச் செயல்கள் புரிந்து பெயரும் புகழும் அடைய விரும்பினேன்....."

"இப்போது அந்த ஆசை போய் விட்டதல்லவா?"

"ஆம்; பொன்னியின் செல்வர் அரசுரிமையைக் காட்டிலும் அமைதியான வாழ்க்கையை அதிகம் விரும்புகிறார். போர்க்களத்தில் வீர வாளேந்தி வீசுவதைக் காட்டிலும் ஆலயத் திருப்பணியில் கல்லுளி கொண்டு வேலை செய்வதற்கு அதிகம் ஆசைப்படுகிறார்....."

"மதுராந்தகனோ இராஜ்யம் ஆளுவதில் தீவிர நோக்கம் கொண்டிருக்கிறான். ஆடு புலி ஆக மாறுகிறது; புலி ஆடாகிறது. ஆலவாய் இறைவன் நரியைப் பரியாக்கிப் பரியை நரியாக்கியதாகச் சிவபக்தரின் வரலாறு கூறுகிறது. அதுபோல்...."

"தேவி! தங்களுடைய கருணையினால் நானும் ஒரு நரியானேன். ஒளிந்தும் மறைந்தும் தந்திர மந்திரம் செய்தும் இல்லாதது பொல்லாததைச் சொல்லியும் பகைவர்களிடமிருந்து தப்பி வர வேண்டியதாயிற்று. அரசிளங்குமரி! இந்த வேலை இனிச் செய்ய என்னால் முடியாது! விடை கொடுங்கள்...."

"ஐயா! என் பிராண சிநேகிதி என்று எண்ணியிருந்த வானதி என்னைக் கைவிட்டுப் போகப் பார்க்கிறாள். நீருமா என்னைக் கைவிட்டுப் போய்விட எண்ணுகிறீர்?"

"தேவி! கொடும்பாளூர் இளவரசிக்கும் தங்களுக்கும் உள்ள விவகாரத்தைப் பற்றி நான் அறியேன். ஆனால் நான் எப்படித் தங்களைக் கைவிட முடியும்? இராஜாதி ராஜாக்கள் தங்களுடைய மணிப் பொற் கரத்தைக் கைப்பற்றத் தவம் கிடக்கிறார்கள். நானோ குற்றவேல் செய்ய வந்தவன்...."



ளையபிராட்டி அப்போது தன்னுடைய திருக் கரத்தை நீட்டினாள். இது கனவா, நனவா என்ற தயக்கத்துடன் வந்தியத்தேவன் அந்த மலர்க் கரத்தைத் தன் இரு கைகளாலும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அவனுடைய உள்ளமும் உடம்பும் பரவசமடைந்தன.

"வாணர் குலத்து வீரரே! கற்பென்னும் திண்மையைக் குலதனமாகப் பெற்ற பழந்தமிழ் மன்னர் வம்சத்தில் வந்தவள் நான். எங்கள் குலத்து மாதரில் சிலர் கணவனுடன் உடன் கட்டை ஏறியதுண்டு. பதியின் உடலை எரித்த தீயைக் குளிர்ந்த நிலவென்று அவர்கள் கருதி அக்கினியில் குதித்தார்கள்!"

"கேள்விப்பட்டிருக்கிறேன்;

'தேவி!''

''உமது கரத்தைப் பற்றிய இந்த என் கரம் இன்னொரு ஆடவனுடைய கையை ஒரு நாளும் பற்றாது...''

வல்லவரையன் சொல்லிழந்து செயலிழந்து குந்தவையின் கண்ணீர் ததும்பிய கண்களைப் பார்த்த வண்ணம் மதியும் இழந்து நின்றான்.

''ஐயா! உம்முடைய பதற்றமான காரியங்களினால் உமது உயிருக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்தால் என்னுடைய கதி என்ன ஆகும் என்பதைச் சிறிது எண்ணிப் பாரும்.''

''தேவி! தங்களுடைய இதய சிங்காதனத்தில் இடம் பெற்ற இந்தப் பாக்கியசாலி உயிருக்குப் பயந்த கோழையாயிருக்க முடியுமா?''

''கோழைத்தனம் வேறு, ஜாக்கிரதை வேறு, ஐயா! முதன் மந்திரி அநிருத்தருக்குக் கூடத் தங்கள் வீரத்தைப் பற்றி ஐயம் கிடையாது.''

''பின்னர், என்தைப் பற்றி அவர் ஐயப்படுகிறார்....''

''நீர் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் என்று ஐயுறுகிறார்....''

''அப்படியானால், வைத்தியர் மகன் பினாகபாணிக்கு அளித்த மறுமொழியை அவருக்கும் அளிக்கச் சித்தமாயிருக்கிறேன். சிறைக் கதவைத் திறவுங்கள்; அந்த மனிதர் எங்கே இருக்கிறார் என்று சொல்லுங்கள்.''

''வைத்தியர் மகனாவது மற்போரில் சிறிது பழக்கமுள்ளவன்; அநிருத்தர் சொற்போர் அறிவாரேயன்றி மற்போர் அறியார். அறிவின் கூர்மையே அவருடைய ஆயுதம்; வாளின் கூர்மையை அவர் என்றும் துணை கொண்டதில்லை....''

''அப்படியானால், என்னுடைய வாளின் கூர்மையைத்தான் முதன் முதலில் பரீட்சை பார்க்கட்டுமே?''

''ஐயா! இந்த நாட்டில் சக்கரவர்த்திக்கு அடுத்த மரியாதைக்குரியவர் முதன் மந்திரி அநிருத்தர். அவருடன் பகிரங்கமாக முரண்படப் பழுவேட்டரையர்களும் தயங்குகிறார்கள்....''

''பழுவேட்டரையர்கள் குற்றம் உள்ள நெஞ்சினர். அவர்கள் பயப்படுவார்கள். நான் ஏன் பயப்பட வேண்டும்?''

''இளம் பிராயத்திலிருந்து என் தந்தையின் உற்ற தோழர் அவர். முதன் மந்திரிக்குச் செய்த அவமரியாதை சக்கரவர்த்திக்கும் எனக்கும் செய்த அவமரியாதையாகும்.''

''அப்படியானால், அவருடைய நம்பிக்கையை நான் பெறுவதற்கு வழியையேனும் சொல்லுங்கள்.''

''முதன் மந்திரி காஞ்சிக்கு மிகவும் நம்பிக்கையான ஒருவரை அனுப்ப விரும்புகிறார். உம்மை அனுப்பலாம், நம்பி அனுப்பலாம் என்று நான் அவருக்கு உறுதி அளித்திருக்கிறேன்.''

''தேவி! காஞ்சிக்கு என்னை அனுப்பாதீர்கள்! என் மனத்திற்குள் ஏதோ ஒரு குரல் 'காஞ்சிக்குப் போகாதே!' என்று சொல்லிக் கொண்டிருக்கிறது.''

''அது ஒருவேளை பழுவூர் இளைய ராணியின் குரலாயிருக்கலாம் அல்லவா?''

''இல்லவே இல்லை! தங்களுடைய சொல்லுக்கு மாறாக அந்த விஷநாகத்தின் குரலை நான் கேட்பேனா?''

''ஐயா! பழுவூர் இளைய ராணியைப் பற்றி இனி எந்த சமயத்திலும் அப்படியெல்லாம் பேசாதீர்கள்!''

''இது என்ன? ஏன் இந்த திடீர் மாறுதல்!''

''ஆம்; என் மனம் அவள் விஷயத்தில் அடியோடு மாறி விட்டது. நீர் இலங்கையிலிருந்து கொண்டு வந்த செய்தியைக் கேட்ட பிறகு.''

''அப்படியானால் இனி நான் பழுவூர் இளைய ராணியிடமும் பய பக்தியுடன் நடந்து கொள்ள வேண்டியதுதானோ!''

''ஆம்!''

''அவள் பக்தியுடன் பூஜை செய்யும் கொலை வாளை என்னிடம் கொடுத்து 'இன்னாருடைய தலையைக் கொண்டு வா!' என்று சொன்னாலும் கொண்டு வர வேண்டியதுதானோ?''



ந்தவை தேவியின் உடம்பு நடுங்கிற்று. மறுமொழி கூறிய போது அவளுடைய குரலும் நடுங்கிற்று.

"பழுவூர் ராணியிடம் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டியது தான். ஆனால் அவள் பேச்சைக் கேட்க வேண்டிய அவசியமில்லை. அவள் எத்தகைய காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பது அவளுக்கே தெரியாமலிருக்கலாம் அல்லவா?"

"அப்படித்தான் அவளும் கூறினாள். 'நான் எதற்காக இந்தக் கத்தியைப் பூஜை செய்து கொண்டிருக்கிறேன் என்பது எனக்கே தெரியவில்லை' என்றாள்."

இதைக் கேட்ட இளவரசி இன்னும் அதிகமாக நடுங்கிய குரலில், "இந்தச் சோழர் தொல்குடியைத் தெய்வந்தான் காப்பாற்ற வேண்டும்" என்றாள்.

"காப்பாற்றுகிற தெய்வம் இந்த ஏழையைச் சாதனமாக வைத்துக் கொண்டு காப்பாற்றட்டும்" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! நானும் அவ்வாறுதான் நம்பியிருக்கிறேன். நீர் காஞ்சியிலிருந்து திரும்பி வந்ததும் மறுபடி ஒரு தடவை இலங்கைக்குப் போக வேண்டும். அந்த ஊமைத் தாயை எப்படியாவது இங்கே அழைத்து வர வேண்டும்......"

"அவளை அழைத்து வருவது சுழிக் காற்றைக் குடத்தில் அடைத்துக் கொண்டு வருவது போலத்தான். இப்படி ஒரு முறை யாரோ சொன்னார்கள். ஆம், அந்த வீர வைஷ்ணவன் தான். ஒரு வேளை அவனே அழைத்து வந்திருக்கலாம்."

"இல்லை; அவனால் அந்தக் காரியம் முடியவில்லை. உம்மாலேதான் அந்தக் காரியம் ஆக வேண்டும்."

"அப்படியானால் என்னைக் காஞ்சிக்கு அனுப்பாதீர்கள், தேவி!"

"ஏன்?"

"அங்கே என் எஜமானர் இருக்கிறார். அவர் கேட்டால் நான் எல்லா விவரங்களையும் சொல்லித்தான் ஆக வேண்டும். பழுவேட்டரையர்களும் மற்ற சிற்றரசர்களும் செய்யும் சதியைப் பற்றி அறிந்தால் உடனே வெகுண்டு எழுவார். சக்கரவர்த்தியைச் சிறை வைத்திருப்பது போல் வைத்திருக்கிறார்கள் என்று அறிந்தால் உடனே படை எடுத்துக் கிளம்புவார். பொன்னியின் செல்வரைப் பற்றிய செய்தி அவர் காதில் எட்டியிருந்தால் இதற்குள்ளேயே ஒரு வேளை புறப்பட்டிருந்தாலும் புறப்பட்டிருப்பார்..."

"அதற்காகவேதான் உம்மை அனுப்ப விரும்புகிறேன். அவர் காஞ்சியை விட்டுப் புறப்படாமல் எப்படியாவது தடுத்து விட வேண்டும்."

"நான் காஞ்சியை அடைவதற்குள் அவர் புறப்பட்டிருந்தால்?......."

"வழியில் அவன் எங்கே இருந்தாலும் அங்கே போய்ச் சேர்ந்து கொள்ளுங்கள். எல்லாவற்றையும் விட முக்கியமாக நீர் அவசியம் செய்ய வேண்டிய காரியம் ஒன்று இருக்கிறது....."

"சொல்லுங்கள்!"

"பெரிய பழுவேட்டரையர் இளைய ராணியுடன் கடம்பூர் மாளிகைக்குப் புறப்பட்டு விட்டார் என்ற செய்தி கிடைத்திருக்கிறது....."

"உண்மையில் இளைய ராணிதான் போகிறாளா! அல்லது இளைய ராணியின் பல்லக்கில்...."

"இல்லை; இளைய ராணிதான் போகிறாள். என் சித்தப்பா தான் இன்னும் இங்கே இருக்கிறாரே?"

"எதற்காகப் போகிறார்களாம்?"

"ஆதித்த கரிகாலனையும் கடம்பூருக்கு வரும்படி அழைத்திருக்கிறார்கள். கலியாணப் பேச்சு என்பது வெளிப்படையான காரணம். இராஜ்யத்தை இரண்டாகப் பிரித்துக் கொடுத்துச் சமாதானம் செய்து வைக்கப் போவதாகவும் ஒரு பேச்சு நடந்து வருகிறது."

"என் எஜமானர் அதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டார்."

"அதைப் பற்றியெல்லாம் இப்போது எனக்குக் கவலை இல்லை."

"பின்னே, என்ன கவலை தேவி!"

"இன்னதென்று சொல்ல முடியாத பயம் என் மனத்தில் குடிகொண்

## அருள்வாக்கு

**வாய்** மௌனத்தோடு தினமும் கொஞ்ச நேரமாவது எதையும் நினைக்காமல், சிந்தனை தாரையை அடக்கி வைக்க வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறது: "தூஷ்ணீம் கிஞ்சித் அசிந்தயேத்." ஸாதிப்பது கஷ்டந்தான். இதற்கென்றே உட்கார்ந்தாலும், "எப்படி ஒன்றையும் நினைக்காமலிருப்பது? 'ஒன்றையும் நினைக்காமலிருக்க வேண்டும்' என்ற நினைவுதானே இப்போதும் வந்து கொண்டிருக்கிறது?" என்று தோன்றும். மனஸ் எதையும் நினைக்காமலிருக்க வேண்டுமென்று பிரயாசைப்படுவதும் மனஸின் ஒரு கார்யம்தான். சிந்தையை அடக்கியே சும்மா இருக்கும் திறம் அரிது என்று சொன்னது இதனால்தான். ஆனாலும் இப்படிப் பண்ண வேண்டும் என்ற பூர்ண ஈடுபாட்டோடு, விடாமுயற்சியுடன் இதற்காக உட்காருவது என்று ஆரம்பித்தால், ஈச்வரக்ருபையில் அந்த லக்ஷ்யம் கொஞ்சம் கொஞ்சமாகக் கைகூட ஆரம்பிக்கும். நாம் பண்ணக் கூடியது யத்தனம்தான். பலன் ஈசுவரன் தான் தரவேண்டும். அதனால் "சும்மா" என்று தாயுமானவர் சொன்னபடி ஒரு சிந்தையும் இல்லாமல் உட்கார வேண்டும் என்ற தாபத்தோடு முயற்சியைத் தொடர்ந்து கொண்டே போனால், என்றைக்கோ ஒருநாள் அவன் ஸித்தியை அநுக்ரஹிப்பான்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

டிருக்கிறது. நெஞ்சு திக், திக் என்று அடித்துக் கொள்கிறது. அரைத் தூக்கத்தில் விவரமில்லாத பயங்கரங்கள் என்னைச் சூழ்ந்து கொள்கின்றன. நல்ல தூக்கத்தில் அகோரமான கனவுகள் கண்டு விழித்துக் கொள்கிறேன். அப்புறம் வெகுநேரம் வரையில் என் உடம்பு நடுங்கிக் கொண்டிருக்கிறது."

"இந்த நிலையில் தங்களைப் பிரிந்து என்னை ஏன் போகச் சொல்லுகிறீர்கள்? தங்களுக்கு எத்தகைய அபாயம் வந்தாலும் என் உயிரைக் கொடுத்து....."

"ஐயா! என்னுடைய பயம் என்னைப் பற்றியதே அன்று. என் தமையனைப் பற்றியது; பழுவூர் இராணியைப் பற்றியது. அவர்கள் சந்தித்தால் என்ன நேரிடுமோ என்று எண்ணி என் உள்ளம் கலங்குகிறது. அவர்கள் தனியாகச் சந்திக்க முடியாதபடி நீர் தடை செய்ய வேண்டும்......"

"தேவி! அவர் ஒன்று செய்வதற்கு நினைத்தால் அதை யார் தடுக்க முடியும்?"

"ஐயா! என் தமையனைக் காப்பாற்றும் இரும்புக் கவசம் போல் நீர் உதவ வேண்டும். அவசியமானால் நந்தினி யார் என்பதை என் சகோதரனிடம் சொல்லி விட வேண்டும்..."

"அதை அவர் நம்ப வேண்டுமே?"

"நம்பும்படியாகச் செய்வது உமது பொறுப்பு. எப்படிச் செய்வீர் என்று எனக்குத் தெரியாது. அவர்களை எப்படியேனும் சந்திக்க முடியாதபடி செய்தால் மிக்க நலமாயிருக்கும்."

"தேவி! என்னாலியன்ற முயற்சிகளைச் செய்துபார்க்கிறேன். தோல்வி அடைந்தால் என்னைக் குற்றம் சொல்ல வேண்டாம்" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! தாங்கள் தோல்வி அடைந்தாலும் வெற்றி அடைந்தாலும் என் இதயச் சிறையிலிருந்து இந்த ஜன்மத்தில் தங்களுக்கு விடுதலை கிடையாது!" என்றாள் அரசிளங்குமரி.

(தொடரும்)



• சுவர்களில் செய்தித்தாள்கள்...

பற்றினால் ஒன்றுபடுகிறோமல்லவா? அது போலத்தான் இந்த மரத்திலும் என்று விளக்கினார் அந்த கைடு.

•• கல்கத்தாவில் காளி கோவில்களுக்குப் பஞ்சமே இல்லை என்றாலும், மிக முக்கியமானவை என்று கருதப்படுபவை இரண்டு: அவை தட்சிணேஸ்வர் காளி கோவிலும், 'காளி காட்'டில் உள்ள கோவிலும்தான். ஹூக்ளி நதிக் கரையில் அமைந்துள்ளது தட்சிணேஸ்வர் காளி கோவில். ராணி ராஷ்மோனியால் கட்டப்பட்ட இந்தக் கோயிலில் தான் பகவான் ராமகிருஷ்ண பரமஹம்சர் தங்கியிருந்து, காளிக்கு பூஜை செய்தார். இந்தக் கோயிலில் இப்போது ஆடு, மாடுகள் பலியிடப்படுவது தடை செய்யப்பட்டு விட்டாலும் இன்னும் 'காளிகாட்'டிலுள்ள

# சுற்றிப் பார்த்தோம்; சொல்கிறோம்...

•• நெரிசலான, எரிச்சலூட்டும் கல்கத்தா நகரில் ரம்மியமான சூழ்நிலையில் பொழுதைக் கழிக்க ஏற்ற ஓர் இடம் என்று வோட்டுக்கு விட்டால், அபரிமிதமான வித்தியாசத்தில் வெற்றி பெறுவது 'பொடானிகல் கார்டன்'தான். இந்திய அரசின் பராமரிப்பில் உள்ள இந்தப் பிரம்மாண்டமான பூங்காவில் சுமார் முப்பதாயிரத்துக்கும் அதிகமான செடி, கொடி, மர வகைகள் உள்ளனவாம். இரட்டை சதம் போட்டு விட்ட இந்தப் பூங்கா இந்தியாவிலேயே மிகப் பெரியதும், பழைமையானதுமாகும். இங்கேயுள்ள மரங்களில் சூப்பர் ஸ்டார் அந்தஸ்து பெற்றது ஓர் ஆலமரம். ஆமாம்! ஏறத்தாழ 400 மீட்டர் சுற்று வேலி போடப்பட்டுள்ள இந்த ஆலமரத்தின் மூல வேர் அழிந்து போய் விட்ட பின்பும் கூட, விழுதுகளின் காரணமாய் அமர்க்களமாய் நிற்கிறது. விழுதுகளின் எண்ணிக்கை? 'ம்... மூர்ச்சை போட்டு விழாதீர்கள்!' 'ஆயிரத்து எண்ணூற்று எழுபத்தைந்து!' இந்தப் பூங்காவில் உள்ள இன்னொரு முக்கியஸ்தர் 'Mad மரம்!' ஆம்! பைத்தியக்கார மரம்தான். ஏன்? "இதில் ஓர் இலை போல இன்னோர் இலை இருக்கவே இருக்காது; இந்த மரம் இந்திய நாடு போல!" என்றார் கைடு. 'இந்தியர்களை எல்லாம் பைத்தியக்காரர்கள் என்கிறீர்களா?' என்று ஆட்சேபித்தார் ஒருவர். "இல்லை! இல்லை! மதத்தால், மொழியால் நாம் எல்லாரும் வேறுபட்டாலும், தேசப்

கோயிலில் தடை செய்யப்படவில்லை. நாள் தோறும் அங்கே பலி நடந்து கொண்டுதான் இருக்கிறது என்பது வருத்தத்திற்குரிய விஷயம்.

•• உலகின் எல்லா பாகங்களிலுமிருக்கும் ராமகிருஷ்ண மடங்கள் மற்றும் மிஷன்களின் தலைமையகம் கல்கத்தாவில்தான் இருக்கிறது. சுவாமி விவேகானந்தரால் துவங்கப்பட்ட இது ஹூக்ளி நதிக்கரையோரமிருப்பதே ஓர் அழகு. இங்குள்ள வழிபாட்டு மண்டபத்தை ஓரிடத்திலிருந்து பார்த்தால் சர்ச் போலவும் இன்னோரிடத்திலிருந்து பார்த்தால் மசூதி போலவும் வேறோர் இடத்திலிருந்து பார்த்தால் இந்துக் கோயில் போலவும் தெரியும்படி அமைத்திருப்பதே இம் மடத்தின் பரந்து பட்ட பார்வைக்குச் சான்று. நூற்றுக்கணக்கான டூரிஸ்டுகளும் பக்தர்களும் தினந்தோறும் வந்து பார்க்கக் கூடியதாகவும் வழிபடக் கூடியதாகவும் இருந்தும் சுத்தமென்றால் அப்படியொரு சுத்தம். அந்தச் சுத்தத்திற்கே அங்கு அனைவரும் தண்டனிட்டு நமஸ்காரம் செய்யலாம்.

•• பர்மிய பாணியில் கட்டப்பட்டுள்ள சமணர் கோயிலின் அழகே தனி. கோயிலுக்கு முன்பக்கமுள்ள தோட்டமும், தோட்டத்திலுள்ள குளத்தில் தண்ணீருக்கு வெளியில் வருவது போல் துள்ளித் துள்ளி விளையாடும் மீன்களும் பார்க்கப் பார்க்கச் சலிக்

காதவை. கோயிலுக்குள்ளே இரு பக்கங்களிலும் கண்ணாடிகள் வைக்கப்பட்ட சுவர்கள் உள்ளன. அதன் வழியே செல்லும் போது நமது உருவத்தின் பிம்பங்கள்' ஏராளமாய்த் தெரியும். அப்படி எத்தனை பிம்பங்கள் தெரிகின்றனவோ அத்தனை பிறவிகள் இன்னும் நமக்கு உண்டு என்று பலரும் நம்புகிறார்கள்!

** கல்கத்தா என்றதும் உலகம் முழுவதும் நினைவுக்கு வரும் ஒருவர் அன்னை தெரசா. இவரது 'மிஷனரீஸ் ஆப் சாரிடீஸ்' அமைப்பின் தலைமையகம் கல்கத்தாவில் தான் இருக்கிறது. இந்த அமைப்பின் கீழ் இயங்கி வரும் சிசுபவன் என்கிற அனாதைக் குழந்தைகள் இல்லம், தொழுநோயா



* சமணர் கோவில்

ளர் இல்லம், முதியோர் இல்லம், சாகப் போகிறவர்களுக்கு நிம்மதி தரும் 'ஹோம் ஃபார் டையிங்' போன்ற எதையுமே விருப் பப்பட்ட யாரும் சென்று பார்வையிடலாம். டி.வி, பத்திரிகை என்று யாருக்கும் பேட்டி தரும் வழக்கமெல்லாம் கிடையாது. 'நீங் களாகவே வந்து பாருங்கள்; பார்த்ததை எழுதுங்கள். எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. எங்களுக்குத் தொண்டுதான் முக் கியம். விளம்பரம் இல்லை' என்று சொல்லி விடுகிறார்கள்!

•• இந்தியாவிலேயே மிகப் பெரிய மியூ சியம் என்ற சிறப்பை உடையது கல்கத்தா வின் 'இந்தியன் மியூசியம்'. 1875–ம் ஆண்டு கட்டப்பட்ட இதன் விலங்கியல், புவியியல், பூகோள இயல் பகுதிகள் மிக வும் சிறப்பானவை. புவியியல் பகுதியில், மலைப் பாறைகளில் செய்யப்பட்ட சிற்ப வேலைகள் பற்றிய புகைப்படங்களின் தொகுப்பை வைத்திருக்கிறார்கள். சிரவண பௌகொள, பேலூர், ஹளபீடு, சோம நாத்பூர், ஹம்பி... என்று என்னென்னவோ இருக்கிறது. ஆனால் அங்கே நம் மகாபலி புரம் படத்தைக் காணோம்! அதே போலத் தான், பல்வேறு மலைஜாதியினரையும், ஆடை ஆபரணங்களையும் அடையாளம் காட்டும் வண்ணம் அந்தந்த மலை ஜாதி யினரின் (மண்) சிலைகளைத் தத்ரூபமாய் வைத்திருக்கிறார்கள். ஆனால் நம் மாநிலத் துத் தோடர்களைக் காணோம். வடக்கத்தி யர்கள் கண்ணில் நம் பக்கத்து நல்ல விஷ யங்கள் ஏன் படுவதில்லை?


* மூன்று மாடிகளில் முதல் மாடிதான்....

•• கல்கத்தா போகிற சிறுவர், சிறுமியர் எக் காரணம் கொண்டும் மிஸ் பண்ணக் கூடாத ஒன்று உண்டென்றால் அது நேரு குழந்தைகள் மியூசியம்தான். பெயரில் குழந் தைகள் என்று இருந்தாலும் உள்ளே போகிற பெரியவர்களும் குழந்தைகளாகி விடுகிறார்கள் என்பதுதான் நிஜம். உலகத் தின் பல்வேறு நாடுகளிலிருந்தும் வர வழைக்கப்பட்ட பொம்மைகளின் களஞ் சியம் இது. இந்த மிக அருமையான கலெக் ஷனுக்காக மியூஸிய நிர்வாகத்தினரை எத் தனை பாராட்டினாலும் தகும். ஓர் இடத் தில் சாம்பல் நிறக் களிமண்ணில் அன்னப் பறவை போல ஒன்று இருக்கிறது. அதன் பின்னணி சுவாரசியமானது! ஒரு வி.வி. ஐ.பி. இந்த மியூஸியத்தைச் சுற்றிப் பார்த் துக் கொண்டே வந்த போது, சில சிறுவர்

* 'காளிகாட்' காளி கோயில்


கள் களிமண்ணில் தம் மனம் போனபடி உருவங்களை அமைத்துக் கொண்டிருந்த னர். அந்த வி.வி.ஐ.பி.யும் திடீரெனக் கொஞ்சம் களிமண்ணைக் கையில் எடுத் துக் கொண்டு, பொம்மை செய்ய ஆரம் பித்து விட்டார்! அன்னப் பறவை உருவத் தைச் செய்து முடிக்க அவர் எடுத்துக் கொண்ட நேரம் ஐம்பது செகண்டுகள். எல்லோரையும் ஆச்சரியப்படுத்தின அந்த வி.வி.ஐ.பி. யார் தெரியுமா? முன்னாள் ஜனாதிபதி ஜெயில் சிங்!

•• மிருகக் காட்சி சாலைகளில் வழக்க மாய்க் காணப்படும் மிருகங்களைக் கொண் டதுதான் கல்கத்தா மிருகக் காட்சி சாலை யும். இதிலே ஒரே ஒரு ஸ்பெஷாலிடி உண்டு. மிருகக் காட்சிச் சாலையினுள் ளேயே இன்னொரு மினி ஜூ. ஆமாம்! குழந்தைகளைக் கவரும்படியாய்க் குட்டி யானை, புலிக்குட்டி, என்று பல்வேறு குட்டி மிருகங்களைத் தனியே வைத்திருக்கிறார் கள்.

•• நம் ஊரில் கம்ப்யூட்டர் கோர்ஸ்கள் நடத்துகிறார்களே ஆளுக்கு ஆள். அதே போல, கல்கத்தாவில், டூரிஸ்ட்டுகள் நலனுக்காக, 'பேரம் பேசிப் பொருட்கள்

வாங்குவது எப்படி?' என்று வகுப்புகள் நடத்தினால் மிகவும் பயனுள்ளதாய் இருக்கும். ஆமாம்! தெருவோரக் கடைகளில் எழுபத்தைந்து ரூபாய் விலை சொல்லப்பட்ட ஒரு பையை இருபத்தைந்து ரூபாய்க்கு வாங்கியது; நாற்பத்தைந்து ரூபாய் சொல்லப்பட்ட போட்டோ ஆல்பத்தைப் பதினைந்து ரூபாய்க்கு வாங்கியது, இருபத்தி ஐந்து ரூபாய் சொல்லப்பட்ட ஒரு ஜோடி செருப்பைப் பன்னிரண்டு ரூபாய்க்கு வாங்கியது – இதெல்லாம் நம் நிருபர்களுக்கு ஏற்பட்ட சில அனுபவங்கள். கல்கத்தா வியாபாரிகளிடம், கவலையேபடாமல், சகட்டு மேனிக்கு அடிமட்ட விலையில் ஆரம்பித்துப் பேரம் பேசுங்கள். நமது நிருபர்கள் வாங்கியதை விடவும் குறைவான விலைக்கே உங்களால் வாங்க முடியும்!

* தட்சிணேஸ்வர் காளி கோயில்





* தெருவோர மக்கடை

•• வெளியிலிருந்து பார்க்கும் போதே அட்டகாசமான தோற்றம் அளிப்பது (அட்டையில் உள்ள கட்டடம்) விக்டோரியா மெமோரியல் ஹால் என்கிற மியூசியம். தாஜ் மகாலுக்குப் பளிங்குக் கற்கள் சப்ளை செய்த அதே ராஜஸ்தானிலிருந்து பளிங்குக் கற்களைக் கொண்டு வந்து கட்டப்பட்ட வெள்ளைக் கட்டடம். 'இரவில் பார்க்க வேண்டுமே; மார்வலஸ்!' என்றார் கைடு.

விக்டோரியா மகாராணியின் நினைவாய் 1906–ம் ஆண்டு கட்ட ஆரம்பிக்கப்பட்டு, வேலை பூர்த்தியானது 1921–ல். மகாராணி உபயோகித்த பல்வேறு உடைகளும், மற்ற பொருட்களும் இங்கே பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. ஆங்கில வைஸ்ராய்களின் படங்களும், சிலைகளும் மட்டுமின்றி, அவர்களை எதிர்த்துப் போராட்டம் நடத்திய இந்திய அரசர்கள், தேசத் தலைவர்கள் இவர்களின் படங்களும் இடம் பெற்றுள்ளன. இந்தக் கட்டடத்தின் உச்சியில் உள்ள மூன்று டன் எடையுள்ள சிலை காற்றின் திசைக்கேற்பத் திரும்பும்.

•• இந்திய நாட்டின் முக்கியமான மூன்று நூல் நிலையங்களில், மிகவும் முக்கியமானது கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகம். இங்குள்ள நூல்களைப் போன்ற அரிய தொரு கலெக்ஷன் வேறு எந்த இந்திய நூல் நிலையங்களிலும் இல்லை. இத்தாலிய கட்டடக் கலையின் அடிப்படையில் கட்டப்பட்ட இந்த நூல் நிலையம் முன்பு கல்கத்தாவின் ஆளுனர் மாளிகையாய் இருந்ததாம்.



* மோதலைத் தவிர்க்க டயர் கேடயங்கள்....



* ராமகிருஷ்ண மடம்

இன்றைக்கு இங்குள்ள நூல்களின் எண்ணிக்கை பத்து மில்லியன்களுக்கும் அதிகம். இவற்றோடு மிகப் பழைமையான அரிய கையெழுத்துச் சுவடிகளையும் ஏராளமாகப் பாதுகாத்து வைத்திருப்பது இதன் முக்கிய சிறப்பு!

•• கல்கத்தா நகரிலுள்ள சிலைகள் பற்றி அவசியம் குறிப்பிட வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. சிலைகளின் பீடத்தில், சிலைத் திறப்பு விழா நாள், இன்னார் தலைமை, முன்னிலை என்கிற விவரங்கள் எல்லாம் நஹி. சிலையாய் நிற்பவரின் பெயர், அவரது தோற்றம், மறைவு ஆகியவைதான் இருக்கும். விஷயம் இப்படியிருக்கக் கல்கத்தாவில் பாரதியாருக்குச் சிலை வைத்த போது, எம்.ஜி.ஆர். பெயரைப் பீடத்தில் பொறிக்கத் தமிழக அரசு தலைகீழாய் முயன்றதாம். பலன் பூஜ்ஜியம்தான். கடைசியில் தமிழக அரசாங்கம் சிலையை அன்பளிப்பாய்க் கொடுத்த விவரத்தை மட்டும் பீடத்தின் ஒரு மூலையில் பொறிக்க ஒப்புக் கொண்டார்களாம். நம்மவர்களின் விளம்பரப் பித்திற்குக் கிடைத்த சரியான குட்டு!

•• கல்கத்தாவிலுள்ள தலைமைச் செயலகத்திற்கு 'ரைட்டர்ஸ் பில்டிங்' என்று பெயர். எப்படி இதற்கு ரைட்டர்ஸ் பில்டிங் என்று பெயர் வந்தது?' ஆங்கிலேய ஆட்சியின் போது, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அக்கவுண்ட்ஸ் ஆபீஸாய் இது இருந்ததாம். இங்கே உட்கார்ந்து கணக்கு எழுதுவார்களாம். அக்கவுண்ட்ஸ் ரைட்டர்கள் இருந்த காரணமாய்த்தான் இந்தப் பெயர்! எழுத்தாளர்களைச் சிறப்பிக்க அல்ல!

•• கூட வந்த நமது கல்கத்தா நண்பர் கா. சு. மணியன் அந்த வீட்டைச் சுட்டிக் காட்டிச் சொன்ன போது நம்ப முடியவில்லை. சுண்ணாம்படிக்கப்பட்ட மிகச் சாதாரணத் தோற்றமுடைய அந்த வீடு இரண்டு மாடிகளைக் கொண்டது. அதன் பால்கனிகளில் நடுத்தரவர்க்கத்து வீடுகளுக்கே உரிய பாணியில் துவைக்கப்பட்ட சேலை துணிமணிகள் காயப் போடப்பட்டிருக்கின்றன. வாசலில் பாதுகாப்புக்காக இரண்டு மூன்று போலீஸார். இதுதான் மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசுவின் வீடு என்றால் எப்படி நம்புவது? அதுவும் முழு வீடும் இல்லை. வீட்டின் தரைத் தளத்தில் வீட்டுக்காரர் குடியிருக்கிறார். இரண்டாவது மாடியில் வேறொருவர் வாடகைக்கு இருக்கிறார். முதல் மாடியில் முதல்வர் குடும்பம்! (இரண்டாவது மாடிக்காரர் தமது அறையொன்றை ஏ.சி. செய்துள்ளார். ஜோதிபாசு வீட்டில் அதுவும் இல்லை!) இதைவிட ஆச்சரியம், ஏதோவொரு வாய்ச் சண்டை காரணமாக வீட்டுக்காரர் ஜோதிபாசு குடும்பத்தின் மேல் வழக்குத் தொடுத்திருப்பதுதான்! இதெல்லாம் நம்ம ஊரில் நடக்குமா?

•• கல்கத்தாவின் போக்குவரத்து நெரிசலுக்கு உதாரணமே கிடையாது. எனவே சாலையில் போகிற வாகனங்கள் ஒன்றின் மேல் ஒன்று இடித்துக் கொள்வது சர்வ சகஜம். அதை டிரைவர்களோ, பயணி

* ஆலமரம்



* டெவிபோன் சமாதி



மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு!

யங்
ஸென்ஸேஷன்ஸ்-
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

மஃபத்லால்
-நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

களோ பெரிதாய் எடுத்துக் கொள்வது கிடையாது. பஸ்களில் இந்த மாதிரி இடித்தலின் போது ஏற்படும் 'ஜர்க்'கைக் குறைக்க, ஒவ்வொரு பஸ்ஸின் பின்புறமும் பஸ் டயர் ஒன்றையே பொருத்தியிருக்கிறார்கள்!

•• நம் ஊரிலும்தான் டெலிபோன்கள் நாட்கணக்கில் வேலை செய்யாமல் செத்துப் போகின்றன. நாம் என்ன செய்கிறோம்? நாலைந்து தடவை டெலிபோன் இலாகாவுக்குப் புகார் செய்து விட்டுக் காத்துக் கிடக்கிறோம். நம்மையே நொந்து கொள்கிறோம். ஆனால் வங்காளிகள் அப்படி இல்லை. செத்துப் போன டெலிபோன் ஒன்றைப் புரோகிதர் சகிதம் ஊர்வலமாய் (சவ ஊர்வலம்) எடுத்துக் கொண்டு போய் டல்ஹௌசி ஸ்கொயர் பகுதியில் புதைத்து நிஜ சமாதியே கட்டி, மேலே டெலிபோனின் உருவத்தைப் பதித்து, நினைவுச் சின்னம் ஒன்றையே அமைத்து விட்டார்கள். இதை அமைத்தவர்கள் டெலிபோன் உபயோகிப்பவர்களின் அமைப்பு.

•• *1871* — ஆம் ஆண்டில் ஹூக்ளி நதியினைக் கடக்க சர் பிராட் போர்டு லெஸ்லி என்கிற கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைமை இஞ்சினியர் தற்காலிகமாய் ஒரு பாலம் கட்டினார். கட்டை வண்டிகளும், மற்ற வண்டிகளும் போய் வந்ததால், நாளடைவில் பாலம் பலவீனமடையவே, *1935*—ல் புதிதாய் ஒரு பாலம் கட்ட வேண்டியது அவசியம் என்று உணரப்பட்டது. அப்படிக் கட்டப்பட்டதுதான் கல்கத்தாவிலுள்ள இன்றைய தொங்கும் பாலம். உலகத்திலேயே பிஸியான பாலங்களில் இதுவும் ஒன்று. பாதசாரிகளும், சைக்கிள்களும், ஆட்டோக்களும், டாக்ஸிகளும், பஸ்களும், டிராம்களும் ஒரே சமயத்தில் அணிவகுத்துப் போகவும் வரவும் செய்யுமளவுக்கு அத்தனை அகலமான பாலம் இது.

•• கல்கத்தா நகரின் பல பகுதிகளிலும், தரைமட்டத்திலுள்ள குழாய்களிலிருந்து குபுகுபுவெனத் தண்ணீர் வந்து கொண்டே இருப்பது வித்தியாசமான காட்சி. ஆங்கிலேயர்கள் கல்கத்தாவைத் தலைமையிடமாகக் கொண்டு இந்தியாவை ஆண்ட போது, சாலைகளைக் கழுவுவதற்காக ஹூக்ளி நதியிலிருந்து அமைக்கப்பட்ட குழாய்கள் இவை. இன்று இந்தத் தண்ணீர், தெருக்களைச் சுத்தப்படுத்துவதற்கு மட்டுமில்லாமல் தெருவோர மக்கடைகளின் பாத்திரங்கள், கிளாஸ்கள் ஆகியவற்றைக் கழுவவும், நடைபாதை வாசிகள் குளித்துத் துணி துவைக்கவும் கூடப் பயன்படுகிறது!

•• கல்கத்தா வாசிகள் எப்போதும் பரபரப்பாய் இருக்கிறார்கள். பகல் நேரங்களில் நடக்கும் போது பூரி, சப்பாத்தி போன்றவற்றை வாங்கிக் கையில் வைத்துக் கொண்டு, சாப்பிட்டுக் கொண்டே நடப்பது மிகவும் சகஜமான ஒன்று.



அவர்: சினாவில் பிறந்திருக்கக் கூடாதான்னு ஏங்கறீங்களே... ஏன்?

தலைவர்: சினப் பெருஞ்சுவர் முழுவதும் ஆசைதீர என் பிறந்தநாள் போஸ்டர்களை ஒட்டி அமர்க்களப்படுத்தியிருக்கலாமேன்னுதான்!

— உ. ராஜாஜி

•• சாலை ஓரங்களில் ஆங்காங்கேயுள்ள சுவர்களில் காலையிலும், மாலையிலும் செய்தித் தாள்களை ஒட்டி விட்டுப் போகிறார்கள் சில சேவை மனப்பான்மை உடையவர்களும், செய்தித்தாள் வியாபாரிகளும். போகிறவர்களும், வருகிறவர்களும் அந்த இடங்களில் நின்று கொண்டு, பேப்பர் படித்து, நியூஸ் தெரிந்து கொள்கிறார்கள். இப்படி ஒட்டப்படுபவை பெரும்பாலும் வங்க மொழி செய்தித் தாள்கள்தான்.

•• கல்கத்தாவில் பெண்களைக் கிண்டலடிக்கும் அசிங்கமெல்லாம் கிடையாது. அதனால் அங்குள்ள பெண்கள் மிகவும் சகஜமாக ஆண்களைப் போலவே தனியாகக் கூட ஹோட்டல்களுக்குச் சென்று சாப்பிடுகிறார்கள். தெருவோர மக்கடைகளில் ம குடிக்கிறார்கள்.

•• கடைசியாக ஒன்று — ஹௌரா வழியாக டார்ஜிலிங் செல்ல விரும்பும் வாசகர்களுக்கு ஓர் எச்சரிக்கை. உங்கள் ரயில் டிக்கெட்டைச் சென்னையிலிருந்து நேரே நியூஜல்பைகுரி வரை பதிவு செய்யும் பட்சத்தில், சென்னையை விட்டுப் புறப்படும் முன்பே ஹௌராவிலிருந்து நியூ ஜல்பைகுரி போகும் ரயிலான காம்ரூப் எக்ஸ்பிரஸிலும் ரிசர்வேஷன் ஆகிவிட்டதா என்று உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். நாம்தான் மொத்தமாய் டிக்கெட் வாங்கியாகி விட்டதே. ஆட்டமேடிக்காகச் சென்னைவாசிகளுக்கான கோட்டாவில் காம்ரூப் எக்ஸ்பிரஸிலும் 'பர்த்' கிடைத்து விடும் என்று நீங்கள் நினைத்துக் கொண்டு போனால், ஏமாற்றமே மிஞ்சும். அங்கேயுள்ள ஆங்கிலம் தெரிந்தும், பெங்காலி, அல்லது இந்தியில் மட்டுமே பேசும் டி.டி.ஈ.க்கள் துளியும் கூசாமல் 'எனக்கு அதைப் பற்றியெல்லாம் கவலை இல்லை. 'மால்' குடுக்கிறியா?'' என்று ஆக்ஷனோடு கேட்பார்கள். வேறு வழியில்லாமல் நீங்களும் கொடுக்க வேண்டியிருக்கும். இது எங்கள் ஜொந்த அனுபவம். (மொத்தம் நான்கு 'பர்த்'களுக்காக எண்பது ரூபாயை லஞ்சமாக அழுதோம்!)

— எஸ். சந்திரமௌலி.

# நீரில் மிதக்கும் நிலா

## கடந்த இதழில் கடந்தது :

ஷில்பா. அழகானவள். ராணி என்ற அக்காவிற்கும், நிலா என்ற தங்கைக்கும் இடையில் பிறந்தவள். படித்தவள். உயர்ந்த எண்ணங்களைப் பிடித்தவள்.

ஜூபிடர் ரத்தினம் போன தலைமுறையிலிருந்து மேக்கப்மேன். மகள் ஷில்பாவை எப்படியாவது சினிமாவில் நடிக்க வைத்தால் வசதியாயிருக்கலாம் என்று துடிக்கும், நொடித்துப் போன தந்தை. மனைவியை இழந்தவர்.

ஷில்பா, தந்தை ஜூபிடர் ரத்தினத்துடன் டைரக்டர் இளங்குமரனைச் சந்திக்கப் புறப்பட்டு வருகிறாள்.

டைரக்டர் இளங்குமரன் இளமையானவன். அடுத்த படத்தின் கதை இன்னும் முடிவாகாமல் இருப்பதால் கொதித்துக் கொண்டிருப்பவன். சுபாவத்திலேயே உணர்ச்சி வசப்படுகிறவன்.

டைரக்டர் இளங்குமரனைச் சந்திக்கக் காத்திருக்கும் போது ஷில்பா, பிருத்விராஜைச் சந்திக்கிறாள். ஜஸ்ட் ஒரு சந்திப்பு. அவ்வளவுதான்.

பிருத்விராஜ் இளைஞன். சினிமா உலகில் டைரக்டராக நுழையும் கனவுகளைச் சுமப்பவன். இளங்குமரனிடம் சொல்வதற்காக, ஒரு கதையை உருவாக்கிக் காத்திருப்பவன்.

இளங்குமரன் டிஸ்கஷன் அறையிலிருந்து வெளிப்பட்டு, எரிச்சலோடு, 'கதையே இன்னும் முடிவாகலை. அதுக்குள்ள ஹீரோயினா... போ போ...' என்று ஷில்பாவைத் துரத்துகிறான்.

பிருத்விராஜைத் திடீர் முடிவாகக் காரில் ஏற்றிக்கொண்டு, 'சொல்லுய்யா உன் கதையை' என்கிறான்.

நகை, நட்டு, பவுடர், லிப்ஸ்டிக் எல்லாம் அணிவித்துப் போன இதழில் சொன்ன சில பக்கங்களை மேக்கப் கலைத்த நடிகையின் முகத்தைக் காண்பிப்பது போல் மேல் சொன்ன பாராக்களில் காட்டியாகிவிட்டது. திருப்தியடையாதவர்கள் சென்ற இதழைத் தேடிப் படித்துவிட்டு, இங்கே வாருங்கள், ப்ளீஸ்......

---

மதுமதி பஸ்ஸிலிருந்து இறங்கியதும் பரபரப்பாய்க் கண்களை ஓட்டிச் சிவராமனைத் தேடினாள். காணவில்லை.

மணிக்கட்டைத் திருப்பிக் கடிகாரத்தைப் பார்த்தாள். ஐந்து நாற்பது. கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் லேட். எத்தனை பொறுமையாய் இருந்தாலும் விரட்டியடிக்கக் கூடிய தாமதம். ச்சே, நான் ஏன் லேட் செய்தேன்?

பஸ் ஸ்டாண்டில் இன்னும் இருபது முப்பது பேர் இருந்தார்கள். மாலை வியாபாரத்திற்கு வண்டிகள் வந்து அணிவகுத்துக் கொண்டிருந்தன. கடற்கரைக் காற்று அவளைத் தழுவியது — அவள் அனுமதியில்லாமலே.

'ப்ப்பரபரஹ்ம்...' என்ற நீளமான ஹாரன் ஒலி கேட்டு மதுமதி திடுக்கிட்டு, உடன் முகம் மலர்ந்து திரும்பிப் பார்த்தாள்.

மாருதியின் டிரைவிங் ஸீட்டில் சிவராமன். உடன் அவனுடைய கொள்ளை கொள்ளும் சிரிப்பு.

மதுமதி சட்டென்று கதவைத் திறந்து உள்ளே ஏறிக் கொண்டாள். பஸ் ஸ்டாண்டின் கண்கள் அத்தனையும் இங்கேயே குறிபார்க்க, "ஸாரி சிவா, டீ.வி. ஸ்டேஷன்ல லேட்டாயிடுச்சி" என்றாள்.

சிவராமன் இடது கை நடுவிரலால் ஸ்டியரிங்கை ஒரு வளை வளைத்துக் காரைக் கிளப்பினான்.

"ப்ரோக்ராம் நல்லா வந்திருக்கா மது?"

"எம்மேல கோவமா சிவா? எல்லாம் அந்தச் சித்ராவால வந்த வம்பு. கடைசியில ஒரு மிமிக்ரியையும் சேத்துக்கலாம்னு சொல்லிட்டா. டீ.வி. காரங்களும் ப்ரோக்ராம்ல இன்னும் மூணு நிமிஷம் அக்காமடேட் பண்ணலாம்னு சொல்லிட்டாங்க... அதனாலத்தான் நேரமாய்டிச்சி..."

"நான் டீ.வி. ஸ்டேஷனுக்கே போய் விஷயத்தைத் தெரிஞ்சிக்கிட்டுத்தான் வந்திருக்கேன். அதனால ஃபீல் பண்ணாதே மது... ப்ரோக்ராம் நல்லா வந்திருக்கா?"

சிவராமன் கோபமே இல்லாமல், புன்னகை மாறாமல் காரை ஓட்டிக் கொண்டே கேட்டான்.

"நீங்கதான் பாத்துட்டுச் சொல்லுங்களேன்."

"நான் பாக்கறது மட்டுமில்ல. எங்க வீட்ல இருக்கற எல்லோருக்குமே அதை வெச்சித்தான் நான் உன்னை இன்ட்ரட்யூஸ் பண்ணப் போறேன். இந்த வெரைட்டி ப்ரோக்ராமை காம்பேர் பண்ற பொண்ணுதான் நாளைக்கு நம்ம வீட்டுக்கு வரப் போறவன்னு சொல்லப் போறேன்."

"பெங்களூர்ல இந்த வெரைட்டி ப்ரோக்ராம் தெரியுமா சிவா?"

"வீடியோ டேப், வீடியோ டேப்னு ஒண்ணு இருக்கே... அப்புறம் இந்த ப்ரோக்ராம் பெங்களூர்ல தெரிஞ்சா என்ன? தெரியாட்டித்தான் நமக்கென்ன கவலை?"

"இதுக்கு முன்னால உங்க வீட்ல என்னைப் பத்திச் சொல்லலேயில்லியா சிவா?"

"ம்... நெறையச் சொல்லியிருக்கேன்."

"என்னன்னு?" மதுமதி கொஞ்சலாகக் கேட்டாள்.

சிவராமன் காரைச் சாலையோரமாக நிறுத்தினான். அவளைப் பார்த்தான்.

"ஒன்னைப் பத்தி என்ன சொல்ல முடியும் மது? நெஜ...தைப் பூராச் சொன்னா




எங்க வீட்ல இந்தக் கல்யாணத்துக்கு ஒத்துக்க மாட்டாங்க.''

''ஏன் சிவா?'' மதுமதியின் குரலில் லேசான பதற்றம் இருந்தது.

''இவ்வளவு நல்ல பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்க உனக்கு யோக்யதை போறாதுடான்னு சொல்லிடுவாங்க.''

''ச்சீ... ஒரு நிமிஷத்தில் நான் பயந்தே போய்ட்டேன்.''

''எங்கம்மா உன்னைப் பாக்கணும்னு துடிச்சிட்டிருக்காங்க மது... அழைச்சிட்டு வா, அழைச்சிட்டுவான்னு நான் பெங்களூர் போறப்ப எல்லாம் சொல்றாங்க. நீதான் என்னவோ ரொம்ப பிகு பண்ணிக்கறே.''

''இல்ல சிவா. இது பிகு இல்ல. எனக்கென்னவோ நான் உங்க வீட்டை முதல்ல

பாக்கறதை விட நீங்க எங்க வீட்டை முதல்ல பாக்கறதுதான் நல்லதுன்னு தோணுது...''

''ஏன் மது?''

''வீட்டுக்கு வாங்களேன். அம்மா, அப்பா, மீரா எல்லாரையும் பாருங்க. பேசுங்க. அப்புறம் சொல்லுங்க...''

''ஓயெஸ்... என்னிக்குக் கூட்டிட்டுப் போறே?''

''இன்னிக்கே.''

''இப்பவே?''

''ம்!''

சிவராமன் வாயில் இடது கை கட்டை விரலையும் நடு விரலையும் வைத்துப் போலியாக விசில் அடித்தான். மாருதியை அதி உற்சாகமாகக் கிளப்பினான்.

''ரைட்.... ரைட்'' என்றாள் மதுமதி.

''ஓ.கே. ரைட்'' என்று ஸ்டியரிங்கை வலது பக்கம் திருப்பினான் சிவராமன். கார் சின்னப் பாலத்தில் ஏறி, மதுமதி மூக்கைப் பொத்திக் கொள்ள, பக்கிங்ஹாமைக் கடந்தது. ஒற்றை பால்பூத் இருந்த நடை பாதை. அதன் சுவர் முழுக்க நிறையப் போஸ்டர்கள். இன்றே பார்க்க வேண்டிய படங்கள். ஈறுகளைப் பலப்படுத்தும் ஐம்பதே பைசா பல்பொடி. அரிவாள் சுத்தியலுடன் கம்யூனிஸம். சுவைக்கச் சிறந்த பீடிகள். இரண்டு நிமிடப் பயணம். இருள் கவிந்த ஒரு திட்டு.

''இங்கயே நிறுத்திக்குங்க. எங்க சந்துக்குள்ள கார் நுழையாது'' என்றாள் மதுமதி. கார் வலது புறம் ஓரமாய் நடை பாதையை ஒட்டி நின்றது.

வலதுபுறம் மிகச் சிறிய சந்து.

மதுமதி அந்த சந்தில் புடைவையைச் சற்றுத் தூக்கிப் பிடித்து நடந்தாள்.

''நம்ம அரண்மனை வந்தாச்சு'' என்றாள்.

சிவராமன் அந்த வீட்டின் ஒற்றைப்படியைக் கடந்தான். நீளமான நடை. வரிசையாய் வலப்புறம் மாத வாடகைக்கு விடப்படும் லாட்ஜின் அறைகள் போல அறைக் கதவுகள். பத்தடி நடந்ததும் மதுமதி ஒரு கதவைத் தட்டினாள்.

கதவைத் திறந்தவருக்கு ஐம்பதுக்கு மேற்பட்ட வயது. தலையில் நான்கைந்து முடிகள் இன்னும் நட்பு மாறாமல் இருந்தன. அகன்ற நெற்றி. தடிமனான ஃப்ரேம் போட்ட கண்ணாடி. குழிந்த கண்கள். பரந்த மூக்கு. தடிமனான உதடுகள். மீறித் தெரிந்த பற்களில் மேல் வரிசையில் கேட் திறந்த மாதிரி நடுப் பற்கள் மிஸ்ஸிங். வாயோரத்தில் கடித்திருந்த சின்ன பீடி.

''எங்கப்பா'' என்றாள் மதுமதி. உள்ளே நுழைந்து, பரபரப்பாய்ச் சுவரில் சாத்தியிருந்த மடக்கு நாற்காலியைப் பிரித்துப் போட்டாள்.

''உக்காருங்க சிவா! அம்மா உள்ளே வேலையா இருக்காங்க.''

சிவராமன் கொஞ்சம் கூச்சமாய் உட்கார்ந்தான்.

''தம்பி என்ன பண்ணுதுன்னு சொன்னம்மா?''

''ரூபா மெட்டல் ஒர்க்ஸ்னு இண்டியில பெரிய கம்பெனி. மானேஜரா இருக்கார்.''

''அப்பாவுதுங்க'' என்றான் சிவராமன்.

''அப்படியா?'' அணைந்து போன பீடியைக் கையில் எடுத்து மதுமதியிடம் நீட்டினார்.

''அப்படியே பத்தவெச்சிரும்மா.''

மதுமதிக்குப் பின்னால் ஒரு மேஜையில் சிம்னி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதன் கண்ணாடி வாய்க்குள் பீடியைத் தலை கீழாய்த் தொங்க விட்டு மதுமதி பற்ற வைத்தாள். அப்பாவிடம் நீட்டினாள். பீடி மறுபடி ஜகன்னாதனின் வாயோரத்தில் பல்லிடுக்கில் சிக்கிக் கொண்டது.

திரை விலகி அடுத்த அறையில் இருந்து ஒரு தம்ளருடன் அந்த அம்மாள் வெளிப்பட,

''எங்க அம்மா'' என்றாள் மதுமதி.

''காப்பி எடுத்துக்குங்க தம்பி.''

சிவராமன் மறுப்பு எதுவும் சொல்லாமல் காப்பியை வாங்கிக் குடித்தான். காப்பி நாக்கை ஸ்பரிசித்ததும் ஸ்டவ் புகையின் வாசம்.

''உங்க வீடு எங்கே இருக்கு சிவராம்?''

''அடையாறுங்க.''

''அப்பாவும் கம்பெனியைப் பாத்துக்குவாராக்கும்?''

''மெட்ராஸ்ல நான் மட்டுந்தாங்க. அப்பா, அம்மா, சிஸ்டர்லாம் பெங்களூர்ல இருக்காங்க. அங்கயும் பிஸினஸ் இருக்கு. இது எனக்காக அப்பா ஆரம்பிச்ச இண்டஸ்ட்ரி.''

''நீ கூட பெங்களூர்லயே செட்டில் ஆயிடலாமே. மெட்றாஸை விட, பெங்களூர் கிளைமேட்தானே நல்லா இருக்கும்?''

''மெட்ராஸ்தாங்க எனக்குப் பிடிச்சிருக்கு! ஏன்னா இங்கதான மதுமதி இருக்கா!'' சிவராமன் சொல்லி விட்டுப் பக்கவாட்டில் திரும்பி மதுமதியைப் பார்த்தான்.

''எங்க மதுமேல அவ்வளவு பிரியமா சிவராம்?'' ஜகன்னாதன் அணைந்து போன பீடியை வாயிடுக்கிலிருந்து எடுத்துக் கொண்டே கேட்டார்.

''ஆமா சார்.''

''பாவம் மது. அண்ணன், தம்பி இல்லாத பொண்ணு... எனக்குப்பொறந்தரெண்டுமே பொட்டைப் பசங்க... நீதான் அதுக்கு அண்ணனா இருந்து சந்தோஷந் தரணும்.''

அந்த வாக்கியம் சிவராமனின் மார்பை எட்டி உதைத்தது. அவன் உடனே மதுமதியைப் பார்த்தான். ரத்தம் வடிந்து போன அவளது வெள்ளை முகத்தில் அதிர்ச்சி துல்லியமாகத் தெரிந்தது.

பிருத்விராஜ் கதையை நிறுத்தினான். இளங்குமரன் கண்களை மூடிக் கேட்டுக் கொண்டிருந்தவன் கண்களைத் திறந்தான். கையில் புகைந்து கொண்டிருந்த சிகரெட்

என்ன பூர்ணம் சார்,
நீங்க ஏன் எப்போதுமே
"பிஸ்லேரி கிளப் சோடா"வையே
குடிக்கிறீங்க?



சோடான்னா, தண்ணீரும் கார்பன்-டை-ஆக்ஸைடும் சேர்ந்து தயாரிக்கிறதுதான். அந்த தண்ணீரிலே நம் உடலுக்கு உபாதை தரும் எவ்வளவோ கிருமிகள் இருக்குங்கறதை தெரிஞ்சவா எத்தனை பேர்? ஆனா, சென்னை பாட்லிங் கம்பெனியில் குடி தண்ணீரை "ரிவர்ஸ் ஆஸ்மாஸிஸ்" என்ற நவீன சுத்திகரிப்பு முறையால் மறுபடியும் நன்றாக சுத்தம் செய்து சோடாவை தயாரிக்கறாங்க. அதை நானே பார்த்தேன். அதனாலேதான் "பிஸ்லேரி கிளப் சோடா"வை நான் எப்பொழுதும் விரும்பி குடிக்கிறேன்.




"Bisleri
CLUB Soda"

தயாரிப்பாளர் :

சென்னை பாட்லிங் கம்பெனி லிட்.
423, பூந்தமல்லி நெடுஞ்சாலை
சென்னை — 600 106.
தொ.பே. 420440, 420755, 425150.

200 கோடி ரூபாய்
புழக்கமுள்ள சக்தி குழுவின்
ஓர் அங்கம்.

ஊ!

ஆ!

ஔச்!

# "ஊ" "ஆ" "ஔச்" இவ் வேதனைக் குரல்கள் வேண்டாமே!

சுளுக்கு, தசை பிடிப்பு, மூட்டு நோவு ஆகியன போலவே, பொதுவான உடல், முதுகு வலிகளும் துன்பந்தரும். அதற்குக் கவனம் தேவை.

எனவே, கைவசம் அயொடெக்ஸ் இருப்பது நல்லது.

அயொடெக்ஸ் வலியாற்றுவதோடு, திசுக்களின் பாதிப்பைக் குணப்படுத்துகிறது.

இருமுறை அயொடெக்ஸ் தினம் தடவ,
இரு மடங்கு குணம் கிடைக்கும்.

''ஊ'' ''ஆ'' ''ஔச்'' என்ற வேதனைக் குரல்களை விரட்டி, மீண்டும் செயல்பட, அயொடெக்ஸ் தேவை.

**போடுவீர்**
**அயொடெக்ஸ்®**
**புறப்படுவீர் ஓடியாட.**




HTA 1711

SKF—

விரலைச் சுட்டது. கையை ஒரு உதறு உதறி சிகரெட்டைக் கார்க் கதவில் இருந்த ஆஷ்ட் ரேயில் நசுக்கிப் பாழாக்கினான்.

கார் மெட்றாஸ் போக்குவரத்தின் ஊடே மீன் போல் நீந்திக் கடற்கரைச் சாலையைத் தொட்டிருந்தது.

"இந்த பீச் ரோடுலதான் உம் மதுமதியும், சிவாவும் மீட் பண்றாங்களாய்யா?" என்றான் இளங்குமரன் இன்னொரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டே.

"ஆமா சார்" என்றான் பிருத்விராஜ். "மேல கதையைச் சொல்லட்டுமா சார்?"

"சொல்லாதே. ஏறக்குறைய இதே லைன்லதான் நானும் ஒரு கதையை ஃபார்ம் பண்ணி வச்சிருக்கேன். பாக்கலாம். போகப் போகப் பார்க்கலாம். ஏழைப் பொண்ணு. பணக்காரப் பையன். லவ்வு. அந்த லைன் ஓ.கே. அப்புறம் பொண்ணோட அழுக்கு வீடு. அதுவும் ஓ.கே. யதார்த்தமா இருக்கும். அப்பன்காரன் காதல் ஜோடியைப் பாத்து அண்ணன்—தங்கச்சியா இருங்கன்னு சொல்ற மாதிரி சொல்லி நிறுத்துன பாரு... அந்த எடம் செமை பஞ்ச்சா குடுக்கணும். டைட்டில்ல கொஞ்சம் வித்தை காட்டணும்யா. அதெல்லாம் நான் பாத்துக்கறேன். அப்புறம் ரீ—ரெகார்டிங்ல பூஞ்சா பூஞ்சா பூஞ்சா சொய்னு ம்யூஸிக் சார்ஜ் பண்ணிட்டா கைதட்டிருவானுங்க.. ஓ.கே. பரவாயில்லைய்யா. எனக்கு நம்பிக்கை இருக்கு.. தனம் காரைத் திருப்புய்யா... பிருத்விராஜு சிகரெட் பிடிப்பியா...?"

"பழக்கம் இல்ல சார்" என்றான் பிருத்விராஜ். உள்ளுக்குள் திடீரென்று ஒரு நம்பிக்கை ஊற்றுப் புறப்பட்டிருந்தது. உடலெங்கும் சிலிர்ப்பு ஓடியது. அதிர்ஷ்ட தேவதை பக்கத்தில் வந்து உட்கார்ந்திருக்கிறாளா என்று திரும்பிப் பார்த்தான். சிரித்துக் கொண்டான்.

கார் அந்த கடற்கரைச் சாலையில் ஒரு பெரிய ஆர்க் போட்டுத் திரும்பியது.

"எங்கண்ணே?"

"ஸ்டுடியோவுக்கே போய்யா. அந்தப் பொண்ணுங்களையெல்லாம் உக்கார வெச்சிட்டு வந்திருக்கோமில்ல. ஜுபிடர் ரத்தினத்தோட பொண்ணுதேறும்னு நெனைக்கறேன். உன் ஹீரோயின் பேர் என்ன மதுமதியா.... அந்த காரெக்டருக்கு ஷில்பா மூஞ்சிதான் பளிச். புது மூஞ்சி. ஃப்ரெஷ்ஷா காட்னம்னாப் போதும். அவனவன் 'ஆ' 'ஆ'ன்னு அலைய ஆரம்பிச்சிடுவான்...

கார் மறுபடி ஸ்டுடியோவின் எல்லைக்குள் நுழைந்து, காக்கிச் சட்டைக் காரனால் கதவு திறக்கப்பட்டு இளங்குமரன் இறங்கினான்.

சிக் சிக் என்று உள்ளே நடந்தான்.

எதிர்ப்பட்ட ஒரு அஸிஸ்டென்டைப் பார்த்து, "எங்கேய்யா அந்தப் பொண்ணுங்க?" என்றான்.

"நீங்க போவச் சொல்லிட்டிங்கன்னு போய்ட்டாங்க சார்..."

"போய்ட்டாங்களா... நீ என்ன பண்ணிட்டிருந்தே. நாளன்னிக்கு அவுட்டோர்னு தெரியுமில்ல. நம்ம படத்துக்குப் புது ஹீரோயின்தான்னு தெரியுமில்ல... ஏன் அவங்களைப் போக விட்டே...? ஒரு வேலை... ஒரு வேலைன்னா ஒரு வேலை ஒழுங்காச் செய்யத் தெரியாதவனெல்லாம் என் யூனிட்ல வந்து பூந்துக்கிட்டு, ஏன்யா இந்த ராவடி பண்றீங்க..." இளங்குமரன் பட பட என்று தலையில் அடித்துக் கொண்டான். "எல்லாம் கான்ஸல். படமும் கெடையாது. ஒரு எழவும் கெடையாது. போங்க... எங்கயாவது மூட்டை தூக்கப் போங்க..." இளங்குமரன் கத்திக் கொண்டிருக்க...

பிருத்விராஜ் ஸ்டுடியோவில் இருந்து சாலைக்கு ஓடி வந்தான். பிரதான சாலையில் எதிரெதிரே கார்களும், பஸ்களும், தீப்பிடித்துக் கொண்ட மாதிரி விரைந்தன. சில சோம்பேறிகள் பிளாட்பாரச் சுவரில் உட்கார்ந்து அரசியல் பேசினார்கள்.

பிருத்விராஜ் நான்கு பக்கங்களிலும் கண்களை விரட்டினான்.

ஷில்பா, ஷில்பா என்று தேடினான். அவனுடைய மதுமதிக்கு ஷில்பாதான் சரியான உயிர். மதுமதியை அப்படியே ஞாபகப்படுத்தும் முகம்.

சாலையின் எதிர்ப்புறம் ஒரு நூறு அடி தள்ளி ஒரு பஸ் ஸ்டாண்ட் தெரிந்தது. பஸ் ஸ்டாண்டை நெருங்கிக் கொண்டிருந்த அவர்கள் தெரிந்தார்கள். ஷில்பாவும், அவள் அப்பாவும். ஜுபிடர் ரத்தினமா? என்ன விநோதமான பெயர்!

பிருத்விராஜ் இங்கிருந்தே ஒரு முறை 'ஷில்பா' என்று கத்தினான். அவன் குரல் ஒரு லாரியின் ஏர்—ஹாரன் அலறலில் காணாமல் போனது. பிருத்விராஜ் ஓடினான். அவர்களைப் பார்வையில் இருந்து மறையாத வண்ணம் பார்த்துக் கொண்டே ஓடினான்.

சாலையைக் கடந்தான். இதோ பஸ். இதோ ஆட்டோ. ஐயோ இங்கே ஒரு லாரி. ஷில்பா. போய் விடாதே ஷில்பா.

பிருத்விராஜ் ஒரு அம்பாஸிடரின் க்ரீச்சைப் பொருட்படுத்தாமல், சீறிப் புறப்பட்ட ஆட்டோவின் முகப்பில் கை வைத்து அந்தப் பக்கம் தாவி, பஸ்ஸின் படியில் காலை வைத்து ஏறிக் கொண்டிருந்த ஷில்பாவைப் பார்த்தான்.

சட்டென்று அவள் கையைப் பற்றினான்.

ஷில்பா பேசுவதற்கு முன், வாயெடுப்பதற்கு முன், கண்களை அகல விரிப்பதற்கு முன், அவனை பஸ்ஸிலிருந்து இழுத்து இன்னொரு கையால் அவளைப் பற்றிக் கீழே இறக்கினான். ஜுபிடர் ரத்தினம் ஓடத் தொடங்கிய பஸ்ஸில் இருந்து 'ஹோல்டான்' 'ஹோல்டான்' என்று கத்த, பிருத்விராஜ் ஷில்பாவைப் பார்த்தான்.

"நீதான் என் மதுமதி, ஷில்பா" என்றான்.

(தொடரும்)

# கடன்

உங்களில் அநேகர் பார்த்திருக்க மாட்டீர்கள் — இன்றையச் செய்திப் பத்திரிகையில் ஒரு துக்கச் செய்தி வெளியாகியிருக்கிறது. நிமாபூர் ராஜா வினயேந்திர மோகன் சிம்ம ராவ் அவர்களின் மரணச் செய்தி அது. அதை நீங்கள் படித்திருந்தாலும் நிமாபூர் எங்கேயிருக்கிறது என்று மண்டையைக் குடைந்து கொண்டிருப்பீர்கள். அப்படியும் நிமாபூர் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்திருக்க முடியாது. ஏனென்றால் தேசப் படத்தில் இப்போது அந்தப் பேரே இல்லை.

ஆனால் ஒரு காலத்தில் உண்மையிலேயே நிமாபூர் என்று ஒரு சிறிய சுதேச சமஸ்தானம் இருந்தது. பீகாருக்கும் வங்காளத்துக்கும் இடையிலிருந்த இந்த சமஸ்தானம் மொத்தம் இருபத்திரண்டு கிராமங்களைக் கொண்டது. அதற்கு ஒரு ராஜாவும் இருந்தார். அவர்தான் வினயேந்திர மோகன் சிம்ம ராவ். அவர் தம் அறுபத்தேழாம் வயதில் மாரடைப்பால் இறந்த செய்திதான் ஐந்தே வரிகளில் செய்திப் பத்திரிகையில் வெளியாகியிருந்தது.

வினயேந்திர மோகன் சிம்ம ராவ் அவர்களைத் தற்செயலாக நானும் ஒரு சமயம் சந்தித்தேன். இல்லை, தற்செயலாக அல்ல, ஒரு விபத்து மூலமாக.

என் தாத்தாவுக்கு இறந்த பின் சிவலோகப் பிராப்தியில் ஆசை. ஆகவே அவர் முதிர்ந்த வயதில் வானப் பிரஸ்தாசிரமத்தை ஏற்றுக் கொள்ளாமல் காசிக்குப் போய் அங்கேயே நிலையாக வசிக்கத் தொடங்கி விட்டார். என் தந்தைக்கு அடிக்கடி ஊர் மாறும் வேலை; எந்த ஊரிலும் நிலைத்திருக்க வழியில்லை. ஆகவே நான் காசியில் தாத்தாவுடன் இருந்து கொண்டு படித்து வந்தேன்.

காசியின் வங்காளி தலாப் பகுதியில் ஒரு சிறு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அதில் வசித்தோம். நான் தினம் சைக்கிளில் கல்லூரிக்குச் சென்று வந்தேன்.

நான் இந்து பல்கலைக் கழகத்தில் கடைசி ஆண்டு இஞ்சினீரிங் படித்துக் கொண்டிருந்த சமயம். இன்னும் சில மாதங்களுக்குப் பின் இறுதித் தேர்வு.

நான், சிவப்பிரசாத், விசுவநாதன், குருமுக் சிங் நாங்கள் நால்வரும் மாலையில் சைக்கிளில் வீடு திரும்புவோம்.

ரமாபத சௌதுரி

தசாஸ்வமேத கட்டத்துக்குப் பக்கத்தில் ரபீன் மைத்திரியின் சைக்கிள் ரிப்பேர்க் கடை இருந்தது. நாங்கள் நால்வரும் எங்கள் சைக்கிள்களை அங்கே வைத்து விட்டுச் சைக்கிளில் பொருத்தப்பட்டிருக்கும் பிரம்புக் கூடையிலிருந்து துண்டையும் வேஷ்டியையும் எடுத்துக் கொண்டு கங்கையில் இறங்கி விடுவோம். நாள் முழுதும் அடித்த வெயிலில் தண்ணீரின் மேற்பகுதி வெதுவெதுப்பாயிருந்தாலும் கொஞ்ச நேரம் நீச்சல் அடித்து அளைந்து குளித்தால் உடம்புச் சூடு போன இடம் தெரியாது. களைப்பு பறந்து போய் விடும்....

அந்த நாட்களை நினைத்தால் உள்ளம் பூரிக்கிறது. குறிப்பாக, வினயேந்திர மோகன் சிம்மராவுடன் எனக்குப் பரிச்சய மேற்பட்ட அந்த நாள்....

தேதி நினைவில்லை, கிழமை ஞாபகமிருக்கிறது. அன்று புதன் கிழமை. ஞாபகமிருப்பதற்குக் காரணம், புதன் கிழமை எங்கள் வகுப்பு சீக்கிரம் முடிந்து விடும் என்பதுதான்!

அன்று தசாஸ்வமேத கட்டத்தில் நல்ல கூட்டம். நிறையப் பேர் காதுகளை விரல்களால் அடைத்துக் கொண்டு மந்திரங்களை முணுமுணுத்தவாறு ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு பெருங் கூச்சல் கேட்டது. அதன் காரணம் முதலில் புரியவில்லை எனக்கு. அப்புறம் பார்த்தேன். ஒரு பெண்மணி இடுப்பளவு தண்ணீரில் நின்று கொண்டு கூச்சல் போடுகிறாள், தண்ணீரைக் கையாலடித்தவாறு "பாபுயா, பாபுயா!" என்று கத்திக் கொண்டே அழுகிறாள்.

அதே கணத்தில் இன்னொரு காட்சியையும் பார்த்தேன் — சற்றுத் தொலைவில் ஒரு படகுக்குக் கீழேயிருந்து ஒரு சிறு பையனின் தலை தண்ணீரின் மேலே மிதந்து வருகிறது. உடனே படகிலடிபட்டு உள்ளே அமிழ்கிறது. பையன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தவிக்கிறான்; அவன் மூச்சுத் திணறுகிறது.

எனக்குத் தண்ணீரிடம் பயமில்லை. ஆனால் நான் அந்தக் கணத்தில் தண்ணீருக்குள் ஏன் குதித்தேனென்று எனக்கு நிச்சயமாகச் சொல்லத் தெரியவில்லை. அந்தப் பெண்மணியின் அழுகையைக் கேட்டு அவள் மேல் இரங்கியா? சும்மா அலறிக் கொண்டிருந்த மற்றவர்களில் யாரும் பையனைக் காப்பாற்ற முன் வராதது பற்றி



எரிச்சலாலா? இல்லை, கண நேரத்துக்கு ஒரு வீர உணர்வு என்னுள் பிறந்ததாலா? தெரியாது. நான் தண்ணீரில் குதித்து விட்டேன் — எப்படியாவது பையனைக் காப்பாற்றி விட வேண்டும்!

கரையிலிருந்த போது பையனைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. ஆனால் நீந்திப் படகை நெருங்கிய போது பையனைக் காணோம். ஓரிடத்தில் நீர்க் குமிழிகள் கிளம்புவதைக் கண்டு அங்கே முழுகினேன். ஊஹூம், பையன் அங்கே இல்லை. எங்கே அவன்? படகின் மறுபக்கம் போய் விட்டானா? அல்லது படகுக்கு அடியில் அமுங்கிப் போய் விட்டானா?

என் நெஞ்சு நடுங்கியது. என் நெருங்கிய உறவினன், என் அந்தரங்க நண்பன் செத்துக் கொண்டிருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது எனக்கு. அவன் உயிர் பிழைக்கத் தவித்துக் கொண்டிருக்கிறான், அவனை எப்படியாவது காப்பாற்றித் தானாக வேண்டும்!

இன்னொரு தடவை தண்ணீருக்குள் முழுகினேன். ஏதோ ஒன்று என் காலை இறுகப் பிடித்துக் கொண்டது. காலை மேலே இழுக்க முடியவில்லை. என்னால் தண்ணீருக்கு மேலே வர முடியவில்லை. என் காலைப் பிடித்துக் கொண்டிருக்கும் ஜீவனுக்கு அசுர பலம். நான் பயந்து போய் விட்டேன். சாவு நேர்ந்து விட்டாற் போல் என் கண்கள் இருண்டன. நான் பலமாகக் காலையுதறி என்னை விடுவித்துக் கொள்ள முயன்றேன். முடியவில்லை. அவன் என்னைப் பலமாகப் பிடித்திழுக்கிறான். நான் சாவது நிச்சயம் என்று தீர்மானித்து விட்டேன். நான் களைத்து விட்டேன்; அவன் என்னைக் கீழே இழுக்கிறான்.

சில நிமிடங்களுக்கு முன்னால் யாரை நான் என் நெருங்கிய உறவினனாக, அந்தரங்க நண்பனாக நினைத்தேனோ, யாருடைய உயிரை என் உயிருக்கொப்பாகக் கருதினேனோ, அவனே இப்போது என் பரம விரோதியாக, பயங்கரப் பிசாசாகத் தோன்றினான்.

நான் மறுபடியும் காலை உதறினேன். அவன் தன் பிடியை விடவில்லை. அப்போது தற்செயலாக என் கையில் ஏதோ தட்டுப்பட்டது. படகிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த ஒரு கயிறு. நான் அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தொங்கினேன்.

அதன் பிறகு என்ன நடந்ததென்று எனக்குத் தெரியாது. படகுக்காரர்கள் கயிற்றை இழுத்து என்னை மேலே தூக்கியிருக்கிறார்கள்; பையன் என் காலிலிருந்து முழங்கால், முழங்காலிலிருந்து இடுப்பு என்று என்னைப் பிடித்துக் கொண்டு மேலேறி உயிர் பிழைத்திருக்கிறான்.

படகுக்காரர்கள் என்னையும் பாபுயாவையும் கரைக்குக் கொண்டு போட்டு வெகு நேரத்துக்குப் பின்தான் எனக்கு நினைவு

**1988 அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள்:**

1. காயப்படுத்தும் அஸ்திரங்கள் — அவினாசி முருகேசன்
2. மாறுபடும் நியாயங்கள் — கே. விசுவநாதன் (பாலாஜி)
3. நோயாளிகள் — எஸ். சந்திரமௌலி (அழகியசிங்கர்)
4. புத்திர சோகம் — எஸ். சித்தாதம்பி (அறிமுக எழுத்தாளர்)
5. தோரணம் — ஆர். வேங்கடராகவன் (தமிழ்நேசன்)
6. நெஞ்சு பொறுக்குதில்லையே — கி.சங்கரநாராயணன் (விவேக்சங்கர்) (அறிமுக எழுத்தாளர்)
7. காரணம் கேட்காதீர்கள் — கே. விசுவநாதன் (ஸரோஜி)
8. குடை — முகிலை இராசபாண்டியன்
9. படித்தவர்கள் — மு. குணவதி (அருவி) (அறிமுக எழுத்தாளர்)
10. நாயகி 88 — ஜி. எல். ராஜேந்திரன் (அறிமுக எழுத்தாளர்)
11. இது பெண்மை அல்ல — ச. சேகர் (கோட்டை சேகர்) (அறிமுக எழுத்தாளர்)
12. வளைய மறுக்கும் நாணல்கள் — சி. நீ. சந்திரமௌலி (லலிதானந்தன்)
13. ஒட்டறதுதான் ஒட்டும் — பாரதி வீரராகவன்
14. விடை இல்லாத ஒரு கேள்வி — அன்னம்
15. தண்டனை — சொ. பிரபாகரன்
16. விளாம்பழ ஓடுகள் — புதுவை சந்திரஹரி
17. அந்த முரடனும் சில மச்சர்களும் — கா. சு. வேலாயுதன்

வந்தது. இந்தச் செய்திகளையும், அப்போது தான் கேட்டேன்.

எனக்கு நினைவு வந்த போது, முக்காடு போட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண்மணி பாபுயாவைக் கட்டிக் கொண்டு அழுது கொண்டிருந்தாள். சிவப்பிரகாசமும், விசுவநாதனும், குருமுக் சிங்கும் என்னைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.

கழுத்தில் குன்றிமணி மாலையும் காதில் கடுக்கனும் அணிந்திருந்த நடுத்தர வயது மனிதரொருவர் நான் எழுந்து உட்கார்ந்ததும் என்னிடம் வந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டு ஏதோ சொல்ல முயன்றார். ஆனால் வார்த்தைகள் வாயிலிருந்து வரவில்லை. கண்கள்தான் நீர் சொரிந்தன.

சற்று நேரத்துக்குப் பின் தன்னைச் சமாளித்துக் கொண்டு அவர் சொன்னார், ''நீ என் பிள்ளையை மட்டும் காப்பாத்தல லேப்பா! என்னையும் காப்பாத்திட்டே!''

அவருக்கும் அவருடைய மனைவிக்கும் எனக்கு எப்படி நன்றி தெரிவிப்பதென்றே தெரியவில்லை.

கடைசியில் அவர் என்னுடைய பெயரையும் விலாசத்தையும் வாங்கிக் கொண்டு சொன்னார்: ''நீ எனக்கு என் உயிரைக் கொடுத்தே...! நான் உனக்கு என்ன வேணும்னாலும் தரத் தயார்! உனக்கு என்ன, எப்போ வேணுமோ எனக்கு ஒரு கடுதாசி எழுது... பாபுயா என் பையன். பாபுயா மாதிரி நீயும் என் பிள்ளை... நான் நிமாபூர் ராஜா... என் பேரு வினயேந்திர மோகன் சிம்ம ராவ்......''

இந்த நிகழ்ச்சிக்குப் பின் பல ஆண்டுகள் கடந்து விட்டன. நான் இரண்டு தடவை தேர்வில் தோல்வியடைந்து விட்டு சமூகத் தொண்டனாகி விட்டேன். சமூக சேவையில் ஆர்வம் எனக்கு எப்படி ஏற்பட்டது என்று தெளிவாகச் சொல்ல முடியாது என்னால். என் நண்பர்கள் பலர் அந்த வழியில் சென்றதால் இருக்கலாம். அல்லது வேறோர் தூண்டுதலும் இருந்திருக்கலாம் — வினயேந்திர மோகன் சிம்மராவின் கண்ணீரும் நன்றியும் நான் உண்மையில் எவ்வளவு சுயநலக்காரன், அவரது நன்றிக்கு நான் உரியவனல்ல என்ற குற்ற உணர்வை என்னுள்ளத்தில் பிறப்பித்திருக்கலாம்; அதற்குப் பிராயச்சித்தமாக நான் சமூக சேவையில் இறங்கியிருக்கலாம்.

ஆனால் நான் நிமாபூர் ராஜாவை மறக்கவில்லை.

நாங்கள் ஒரு மருத்துவமனை அமைக்கும் முயற்சியில் இறங்கியிருந்தோம். நன்கொடை ரசீதுப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு சுற்றினோம். திடீரென்று ஒரு நாள் தோன்றியது — நிமாபூர் ராஜாவுக்கு எழுதினால் என்ன! அவர் அந்த நிகழ்ச்சியை மறந்து கூடப் போயிருப்பார்..... கொடுப்பாரோ என்னவோ... ஒரு வேளை நூறு, இரு நூறு கொடுத்தாலும் கொடுக்கலாம்.

நிமாபூர் எங்கேயிருக்கிறது என்று விசாரித்துக் கண்டுபிடித்து அவருக்குக் கடிதமெழுதினேன். பழைய நிகழ்ச்சியை அவருக்கு நினைவூட்டி, நாங்கள் மருத்துவமனை அமைக்க விரும்புவதைக் கூறி அதற்கு ஏதாவது நன்கொடை அளிக்கும்படி கேட்டுக் கொண்டேன்.

எனக்கு ஒரு வியப்பு காத்திருந்தது — மருத்துவமனை நிறுவனக் கமிட்டிக்கு ஐயாயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கும் ஒரு கடிதமும் வந்தன. இன்னும் பண உதவி தேவைப்பட்டால் தமக்கு எழுதும்படி சொல்லியிருந்தார் வினயேந்திர மோகன்.

மருத்துவமனைக்குப் பிறகு பள்ளிக்கூடம்; அதற்குப் பிறகு கல்லூரி — இப்படி

சென்னை
தேவிபாரடைஸ் A/C
அபிராமி A/c
உதயம் A/c
மகாராணி
3 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்

சரண்யா சினி கம்பைன்ஸ்
வழங்கும்
பகவதி கிரியேஷன்ஸ்




கதை-திரைக்கதை-வசனம்-இசை
டைரக்ஷன் மேற்பார்வை
K.பாக்யராஜ்
டைரக்ஷன் :
பாலகுமாரன்

K. கோபிநாதன்
முருகன் கலைஞானம்

K. ராஜ்பிரீத்
A.P. மணிவண்ணன்
C. ராமலிங்கம்
V. சேகர்

ELEGANT

எந்தப் பணிக்குப் பணம் தேவைப்பட்டாலும் நான் அவருக்குக் கடிதம் எழுதத் தொடங்கினேன். என் கடிதம் கிடைத்ததும் பணமனுப்பி விடுவார் நிமாபூர் ராஜா. அவர் பணமனுப்ப அனுப்ப என் ஆசையும் வளர்ந்தது, என் கர்வமும் அதிகரித்தது. அது முதல் நான் மேற்கொண்ட பணிகளுக்கு மட்டுமின்றிப் பிறருக்கு ஏதாவது பண உதவி தேவைப்பட்டால் அவர்கள் சார்பிலும் வினயேந்திர மோகனுக்குக் கடிதமெழுதத் தொடங்கினேன். என் வேண்டுகோள் எதுவும் வீண் போகவில்லை. ஒவ்வொரு தடவையும் அவர் பணமனுப்பினார். தொடக்கத்தில் கொடுத்து வந்த அளவு பணமனுப்பாவிட்டாலும் ஓரளவு பண உதவி செய்ய அவர் தவறவில்லை.

வினயேந்திர மோகனுக்கு இவ்வாறு தானம் செய்ய வாய்ப்பளிப்பதன் மூலம் நானே அவருக்கு ஏதோ ஒரு பெரிய உபகாரம் செய்வதாகக் கூட எண்ணத் தொடங்கி விட்டேன் நான்!

இந்திக் கவியொருவர் தம் கவிதைத் தொகுப்பை வெளியிட விரும்புகிறாரா? நிமாபூர் ராஜாவுக்கு ஒரு கடிதம் எழுதி விடுவேன். ஒரு தேச பக்தரின் மரணத்தால் அவரது குடும்பம் வறுமையிலாழ்ந்து விட்டதா? நிமாபூர் ராஜா இருக்கவே இருக்கிறார்! நான் அவருடைய பிள்ளையின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறேன். அவர் இது கூடச் செய்யக் கூடாதா?

காசியில் ஒரு புகழ் பெற்ற பாடகர் கான்ஸரால் பீடிக்கப்பட்டார். அவருக்கு மருத்துவம் செய்து கொள்ளப் பணம் தேவைப்பட்டது. நான் உடனே வினயேந்திர மோகனுக்குக் கடிதமெழுதினேன்.

பணம் வரவில்லை — முதல் தடவையாக. என் கடிதத்துக்குப் பதில் கூட வரவில்லை. என் கடிதம் கிடைத்திருக்காது என்று இன்னொரு கடிதம் எழுதினேன். அதற்கும் பதிலில்லை.

எனக்கு வந்த கோபத்துக்களவில்லை. நான் கடிதம் எழுதினாலே பணம் கிடைத்து விடும் என்று நம்பி வந்த என் நண்பர்கள் இப்போது என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்! அந்த நன்றி கெட்ட மனிதரால் அவர்கள், என் மீது வைத்திருந்த மதிப்பு மண்ணாகி விட்டது. ஆம், நிமாபூர் ராஜா நன்றி கெட்டவர் என்றுதான் தோன்றியது, எனக்கு. அவருடைய பிள்ளையைக் காப்பாற்றினேனே, அந்த நன்றிக்கடன் அவர் இதுவரை அனுப்பிய பிசாத்துப் பணத்தில் தீர்ந்து விட்டது என்று நினைத்து விட்டாரோ நிமாபூர் ராஜா? இருக்கிறது இருபத்திரண்டு கிராமம். அது ஒரு ராஜ்யம்! அதற்கொரு ராஜா! வினயேந்திர மோகனைக் கேலி செய்து என் நண்பர்களிடம் பேசினேன்.

அப்படியும் அவர் மேல் என் கோபம் தணியவில்லை. அதனால் அவருக்குக் கடிதமெழுதுவதை நிறுத்தி விட்டேன்.

சில மாதங்களுக்குப் பின்......

ஒரு சமயம் தேர்தல் வேலையாக முஸப்பர்பூர் போய்க் கொண்டிருந்தேன். வழியில் ஒரு சிறிய ஸ்டேஷனில் ரயில் நின்றது. ஸ்டேஷனின் பெயர் நிமாபூர்.

உடனே ரயிலிலிருந்து இறங்கினேன்.

ராஜாவின் பெயரைச் சொன்ன போது போர்ட்டர் சற்று நேரம் ஒன்றும் புரியாமல் விழித்தான். பிறகு நான் போக வேண்டிய வழியைச் சுட்டிக் காட்டினான்.

நான் வெகு நேரம் அலைந்து தேடிக் கண்டுபிடித்த அந்த வீட்டை, அரண்மனை என்பது பொருந்தவே பொருந்தாது. மாந்தாதா காலத்து வீடு. பாதி இடிந்து போய் விட்டது. இரண்டே இரண்டு அறைகள் மட்டும் எப்படியோ மிஞ்சியிருக்கின்றன.

வெளியில் நின்று கொண்டு கூப்பிட்டேன். ஒரு கிழவர் வெளியே வந்தார். எலும்புந்தோலுமான தோற்றம், பஞ்சுப் பொதியாய் நரைத்த முடி; புடைத்த நரம்புகள்.....

அவர் சொன்னார், "நான் ராஜா இல்லையப்பா; பக்கிரி வினயேந்திர மோகன்....."

என் பெயரைச் சொன்னேன்.

புரை நோயால் பார்வை குறைந்த கிழவருக்கு என்னை அடையாளம் தெரியவில்லை. நான் பழைய நிகழ்ச்சியை நினைவூட்டியதுமே அவர் தம் கைத்தடியைப் போட்டு விட்டு என்னை இறுகக் கட்டிக் கொண்டு கேவிக் கேவியழத் தொடங்கினார் — "என் பிள்ளை, என் பிள்ளை!"

"உங்க பிள்ளை எங்கே....? பாபுயா எவ்வளவு பெரியவனாயிருக்கான் இப்போ?"

புரை விழுந்த கண்களிலிருந்து நீர் வழிய அவர் என்னைப் பார்த்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுச் சொன்னார், "பாபு யாவா?..... நீங்க அவனைக் காப்பாத்தி என்ன பிரயோசனம், பாபுஜி!.... காசியிலிருந்து திரும்பி வந்து ரெண்டு மாசத்திலேயே பகவான் அவனைத் தன் கிட்டே அழைச்சுக்கிட்டார்......!"

நான் திகைத்துப் போனேன். பாபுயா இல்லை! காசியிலிருந்து திரும்பி இரண்டு மாதங்களில் இறந்து போய் விட்டான்!

'என்னையறியாமல் எவ்வளவு கொடுமை இழைத்து விட்டேன் இந்த மனிதருக்கு! ஒவ்வொரு தடவையும் பாபுயாவை அவருக்கு நினைவூட்டி, அவன் பெயரில் அடிக்கடி பணங் கேட்டு......

பாபுயா இறந்து போன பின்னும், அவன் உயிரை நான் காப்பாற்றியதற்கான நன்றிக் கடனை எவ்வளவு காலமாகத் தீர்த்துக் கொண்டு வந்திருக்கிறார் நிமாபூர் ராஜா வினயேந்திர மோகன் சிம்ம ராய்! உண்மையில் கடன்பட்டது நானேதான்.

தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி.

# 18

கன்னத்தில் விழுந்த அடியின் ஆச்சரியம் மெல்ல அம்ருதாவின் கண்களில் கண்ணீராய்த் துளித்தது. ''என்னைப் பார்க்கில தனியா விட்டுட்டு வேதனைக்கு உள்ளாக்கி ரேப் பண்ண ஏற்பாடு செய்துட்டுக் கண் முன்னாலேயே எவளோ ஒரு தெருப் பொறுக்கி பெண் பிள்ளையைக் கொண்டு வந்து காமிச்சுப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்ப ஏற்பாடு செய்து, அதும் பின்னால் கன்னத்தில் பேய் மாதிரி அறைவீங்களா?''

''ஆமாம், அறைவேன்! இந்த மாதிரி பைத்தியம் பைத்தியமாப் பண்ணினா அறையத்தான் அறைவேன்.''

டாக்டர் ரகுநாத் ராம்பிரகாஷின் கைகளைப் பற்றித் தோளை அணைத்து அழைத்துச் சென்றார். ''ராம், ரொம்ப முட்டாள்தனமா நடந்துக்கறீங்க. அவளுக்கு வேண்டியது ஆறுதல். அதைத் தவிர மற்ற எல்லாத்தையும் கொடுத்தும் பிரயோசனமில்லை!''

''ஆறுதல் கொடுக்கறேன் டாக்டர்! மிஸ்டேக் பண்ணிக்கிறாளே! எதுகெடுத்தாலும் கொனஷ்டையா அர்த்தம் பண்ணிக்கிறா, பாருங்க!''

''டாக்டர்! அவளைப் புரிஞ்சுக்க ட்ரை பண்ணுங்க. இப்பத்தானே ஒரு அதிர்ச்சிகரமான அனுபவம் ஏற்பட்டிருக்கு. இந்தச் சமயத்தில்...''

''இந்தச் சமயத்தில் என்ன பண்ணணும், சொல்லுங்க? நீங்கதானே எக்ஸ்பர்ட்.''

''என்னைப் பேசவே விடலையே. நீங்க ரெண்டு பேரும் சண்டை போட்டுக்கிட்டே இருக்கீங்களே....''

''சொல்லுங்க, உபதேசம் இல்லாம சொல்லுங்க! என்னால் ஏதாவது முடியுமான்னு பார்க்கிறேன்!''

உள்ளே டெலிபோனில் அம்ருதாவின் குரல் கணீர் என்று ஒலித்தது. ''அப்பா! நான்தான் அம்ருதா பேசறேன். பெங்களூர்ல இருந்து, என்னை உடனே வந்து அழைச்சுண்டு போயிருங்க! என்னால் இந்த மனுஷன் அடி தாங்க முடியாது!''

''ஆமா! அடிக்கறார்...''

ராம்பிரகாஷ் தம் நெற்றியைத் தேய்த்து உள்ளங்கையால் அடித்துக் கொண்டார். ''பாத்தீங்களா திஸ் இஸ் வாட் ஐ கெட்!''

''பதற்றப்படாதீங்க. கொஞ்ச நாளைக்கு உங்க மனைவியை அவங்க போக்கில் விட்டுருங்க!''

ராம்பிரகாஷ் உள்ளே சென்ற போது அம்ருதா அவசரமாகப் படுக்கையில் ஒரு ஏர் பேகைக் கிடத்தி அதில் வண்ண வண்ணமாகச் சேலைகளைத் திணித்துக் கொண்டிருந்தாள்.

''எங்கே அம்ருதா?''

''நான் எங்கே போனால் உங்களுக்கு என்ன? வர்ஷா இருக்கா! எட்டு ஊருக்கு



உங்களைப் பார்த்துக் கொள்வா!''

''அத்தைப் பாட்டி மாதிரி பேசாதே! நீ எங்கேயும் போகலை. இப்ப....''

''போய்த்தான் ஆகணும். இல்லை, என்னை உச்சாஸ்பத்திரிக்கு அனுப்பிடுவீங்க.''

''அய்யோ!''

ரகு உள்ளே நுழைந்து, ''பாருங்க, மிஸஸ் ராம்! உங்க நல்லதுக்குத்தான் சொல்றோம்'' என்று இழுத்தார்.

''எனக்கு நல்லது எதுங்கறது எனக்குத் தெரியும்! எங்கப்பா வந்ததும் சொல்லுங்க! அவர்கிட்டே சொல்லி 'கன்வின்ஸ்' பண்ணுங்க! டாக்டர்! தயவு செய்து எங்க பிரச்னையில் தலையிடாதீங்க! இவர் மேலாகப் பேசறதும் உள்ளுக்குள்ளே திட்டமிடறதும் வேறே வேறே. எங்க லைப்ல நிறையப் பார்த்துட்டேன் இந்த மனுஷனை! எனக்கு நல்லாவே தெரியும்!''

# இருள் வரும் நேரம்

''உன்னைத்தான் எனக்குத் தெரியவே முடியலை அம்ரு.''

டாக்டர் ரகு ஒரு ப்ரிஸ்க்ரிப்ஷன் எழுதினார்.

''ஸ்லோ பாய்ஸனா?'' என்றாள் நகைப்

**சுஜாதா**



பையன்: அப்பா! சிக்கனத்துக்கு ஓர் உதாரணம் சொல்லுங்களேன்....

தந்தை: நான் மலிவான விலையில் ஒரு ஷர்ட் எடுத்துக் கொண்டால் அது சிக்கனம்.

பையன்: சரி. கஞ்சத்தனத்துக்கு ஓர் உதாரணம்...?

தந்தை: மலிவான விலையில் உன் அம்மாவுக்கு ஒரு புடைவை எடுத்துத் தந்தால் அது கஞ்சத்தனம்!

— மீனம் தனுக.

புடன்.

"இல்லைங்க,வேலியம். உங்க டென்ஷன் கொஞ்சமாவது குறையட்டுமேன்னுட்டு..."

**கார்** அருகில் டாக்டர் ராம்பிரகாஷும் ரகுநாத்தும் பேசிக் கொள்வதைக் கவனித்தாள் அம்ருதா.

"நான் மாட்டிப்பனா ஆசை ஆசை" என்றாள்.

இந்த முனையில் ரகு, "ராம் எப்படியாவது போர்ஸ் பண்ணியாவது அவளை நர்ஸிங் ஹோம்ல அட்மிட் பண்ண ஏற்பாடு செய்யுரு. ஷி ஹாஸ் ஆல் தி க்ளாஸிக் ஸிம்ப்டம்ஸ்!"

"எப்படி ரகு?"

"உங்க மாமனார்கிட்ட சொல்லிப் பாரு! உங்கம்மா வருவாங்களா?"

"ஷி இஸ் எய்ட்டி ரகு."

"ஏதாவது ஒண்ணு செய். தனியாவே விட்டுராதே. அவ அப்பா கூடப் பேசிப் பாரு நல்லவர்தானே!"

"நல்லவரா, கெட்டவரான்னு அவரைக் கண்டுபிடிக்கவே முடியாது!"

"தனியா விட்டுராதே. ரொம்ப முக்கியம். மூணு நாள் ஆஸ்பத்திரியில் படுத்திருந்தாப் போதும், சரியாகி விடுவா. அதுக்கு முன்னாடி அந்தப் பொண்ணு... என்னவோ சொன்னியே, அவளைக் கிட்ட சேர்க்காதே. அக்ரவேட் ஆகும்."

"புரியுது, நான் வர்ஷாவைக் கூப்பிடறதே இல்லை! அவதான் வந்து ஒட்டிக்கிறா!"

"இந்த பீரியட் ரொம்ப கிரிட்டிக்கல்."

ராமுவும் ரகுவும் கைகுலுக்குவதைக் கவனித்த அம்ரு கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

"அம்ரு அம்ரு" என்று லேசாகக் குரல் கேட்டது. ராம்பிரகாஷ்தான்.

"என்ன?" என்று அதட்டினாள்.

"கதவைத் திற."

"அங்கிருந்தே சொல்லுங்க."

"கதவைத் திறவேன். உங்கப்பா என்ன சொன்னார்?"

"வரார்"

"எப்ப?"

"அதை நான் ஏன் சொல்லணும்?"

"சரி, நானே கண்டுபிடிச்சுக்கறேன்."

ராம்பிரகாஷ் டெலிபோன் அருகில் செல்ல, அம்ருதா அதைப் பலவந்தமாகப் பிடுங்கிக் கொண்டு "நான் எங்கப்பாவோட பேசியாச்சு. அவர் வந்து என்னைக் கூட்டிக்கிட்டுப் போவார்..." என்றாள்.

ஒரு கணம் அந்த டெலிபோனைப் பிடுங்கி அவள் மண்டையில் நெத்த வேண்டும் போல் தோன்றிய ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார். "அம்ரு நீ அத்தனை மோசமானவ இல்லை! உன்னால் நிதானமாச் சிந்திக்க முடியும்! யோசிச்சுப் பாரு. நாம கல்யாணம் ஆனதில் இருந்து எத்தனை கிட்டத் கிட்ட சந்தோஷமா இருந்திருக்கோம். நான் சீரியஸாப் படிச்சுண்டிருக்கறப்ப நீ வந்து என் தலையைக் கலைப்பியே, ஞாபகமில்லையா? எத்தனை நாள் போதும் போதும்னு எல்லைகளையெல்லாம் தாண்டி இன்பத்தின் உச்சியையெல்லாம் தொட்டிருக்கோம். எத்தனை நாள் ஒருத்தரை ஒருத்தர் சும்மா பாத்துண்டே பொழுதைக் கழிச்சிருக்கோம்! சொற்களுக்குத் தேவையல்லாம எனக்கு நீ உனக்கு நான்னு... இப்ப அந்த நிலையில் இருந்து என்னைப் பொறுத்தவரையில் நான் மாறவேயில்லை, அம்ருதா! ப்ளீஸ் பிலீவ் மி..."

ப்ரொபஸர் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு கண்ணில் துளித்த ஈரத்தைச் சிரமப்பட்டுக் கட்டுப்படுத்திக் கொண்டார்.

அம்ருதா, "பின்னே ஏன் என்னைப் பைத்தியம்கறீங்க?" என்றாள்.

"யார் சொன்னா அப்படி?"

"டாக்டர் எதுக்கு இப்ப?"

"ஒக்கே, தப்புத்தான். இனி டாக்டர் வர மாட்டார்!"

"வர்ஷா?"

"வர்ஷாவும் இனி வரமாட்டா."

"யூனிவர்ஸிட்டியில்....?"

"சரி அங்கேயும் பார்க்கலை! உனக்குக் குணமாற வரைக்கும்."

"எனக்கு என்ன குணம்? எனக்கு என்ன வியாதி, சொல்லுங்க?"

"ஸாரி வாய்தவறி வந்துருத்து."

"வாய் தவறலை. இட் இஸ் எ கான்ஸ் பிரஸி. எனக்கு மனநிலை உடல் நிலை

சரியில்லைன்னு பட்டம் கட்டி எல்லாரும் சேர்ந்துண்டு என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பப் பார்க்கறீங்க!''

''இல்லை... அவ்வளவுதான் சொல்ல முடியும்!''

''சொல்றது ஒண்ணு, நடக்கறது ஒண்ணு!''

''அம்ரு ரொம்பவே பேசியாச்சு, போதும்.நாளைக்குத் தொடரலாம், என்ன? குட் நைட்!''

அப்போது வாயில் மணி அழைத்தது. ''யாரு இந்த வேளையில்?'' என்று வியப்புடன் ப்ரொபஸர் ராம்பிரகாஷ் கதவைத் திறந்தார்.

''சோமசேகர்.... என்ன இந்த வேளையில்?''

''குற்றவாளியைக் கண்டுபிடிச்சுட்டோம்.''

''குட்.கங்ராஜுலேஷன்ஸ்.வேறே என்ன ந்யூஸ்?''

''உள்ளே வரலாங்களா?''

''வாங்க'' என்று வரவேற்பில்லாமல் சொன்னாலும் சோமசேகர் அதைக் கவனிக்காது உள்ளே வந்து உட்கார்ந்தார். படுக்கை அறையிலிருந்து அம்ருதா வெளிப்பட்டு, ''ஹலோ மிஸ்டர் சோமசேகர்'' என்றாள். அவள் அணிந்திருந்த மாக்ஸி உடை சந்தர்ப்பத்துக்குச் சற்று விரசமாக இருந்தது. அதை அவள் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. சோமசேகர் எதிரே உட்கார்ந்தான்.

''உங்களுக்கு ஒரு குட் ந்யூஸ். அந்த பையனைக் கண்டுபிடிச்சுட்டோம். பேர் பாபு.இளைஞன்!''

''எப்படி கண்டுபிடிச்சீங்க ஸார்?''

சோமசேகர் தம் பையிலிருந்து எடுத்து உள்ளங்கையைத் திறந்து காட்டினார். ''இந்த மோதிரம்தாங்களே நீங்க தொலைச்சது....''

அம்ருதா அதை வாங்கிப் பார்த்தாள். ''இது மாதிரித்தான் எங்கிட்ட ஒண்ணு இருந்தது. இது எங்கே கெடைச்சுது?''

''அந்தப் பையன் அதைப் பெட்டியில் வெச்சிருந்தான்.''

''அரெஸ்ட் பண்ணிட்டீங்களா?''

''பண்ணப் போறோம். அவன் வர்றதுக்காக வெய்ட் பண்ணிட்டிருக்கோம். அதுக்குள்ள ஒரு தடவை க்ராஸ் செக் பண்ணிரலாம்னுட்டு, மிஸஸ் ராம்பிரகாஷ்! இது ங்களுது தானே?''



''எப்படிங்க அவளால் அத்தனை நிர் மாணமாச் சொல்ல முடியும்?'' என்றார் ப்ரொபஸர் குரலை உயர்த்தி.

''அடையாளம் காட்டிட்டா போதுங்க! சொல்ல முடியுங்க!''

''முடியாதுன்னு நெனைக்கிறேன்!''

''ப்ரொபஸர் நான் அவங்களைக் கேக்கறேன். மிஸஸ் ராம்பிரகாஷ்!''

''இந்த மோதிரம் என்னுடையது போலத்தான் இருக்குது! நான் தொலைச்சது போலத்தான் இருக்குது!''

''இதை நீங்க கோர்ட்டில் சொல்லிட்டா. போதும்!''

''என்னது! ஷி இஸ் நாட் கமிங் டு எனி கோர்ட்!''

''கம் ஆன் ப்ரொபஸர். இதெல்லாம் ஆச்சு.பேசியாச்சு!''

''நோ. பாஸிட்டிவ்லி நோ!''

''நீங்க என்ன சொல்றீங்க?'' என்று அம்ருதாவைப் பார்த்தார்.

''ப்ளீஸ் தயவு செஞ்சு நீங்க வந்து ஒரு வார்த்தை பேச முடிஞ்சா போதும். ஒரு வார்த்தை. அடையாளம் காட்டக்கூட வேண்டாம். ஸர்கம்ஸ்டான்ஷியல் எவிடன்ஸ் நெறைய இருக்கு! சம்பவம் நடந்த தேதிங்களுடைய பேப்பரையும் கட் பண்ணி வெச்சிருக்கான். சம்பவம் நடந்த சில நாட்கள் ஆட்டோ எடுக்க வரலை! அதுக்கப்புறம் பாரன்ஸிக் எவிடன்ஸ் தயாரிச்சுக்கலாம்! ஆனா ஆதாரமா இவங்களைக் கோர்ட்டில் பார்த்துட்டாலே, மாஜிஸ்ட்ரேட் பாத்துட்டாலே போதுங்க! பப்ளிஸிட்டி வேற அதிகமாப்போச்சா, அதனால் அதிகம் தொந்தரவில்லாம முடிஞ்சு போயிரும்! உங்க ஒத்துழைப்பு தேவை.''

''அதான் நான் அப்பவே சொன்னேனே, கமிஷனர் ஸார்! நான் நிச்சயம் கோர்ட்டுக்கு வரேன்.சாட்சி சொல்றேன். எனக்கு அதில தன்மானப் பிரச்னை எதும் இல்லை!''

**பா**பு ராத்திரி வீடு திரும்பும் போது. எதிரே சைக்கிள் கடை பூட்டியிருந்த பலகையில் தர்மராஜன் உட்கார்ந்திருந்தார். அவர் சீருடையில் இல்லாவிட்டாலும் வெட்டப்பட்ட கிராப்பும் மீசையின் தடிப்பும் அவரைப் போலீஸ் என்று காட்டிக் கொடுத்தன. பாபுவை அவர் அணுகி, ''பாபு'' என்று பரிவாகக் கூப்பிட்டார்.

அவன் திரும்ப, ''டைம் என்ன?'' என்றார்.

பாபு கையில் கடிகாரம் இல்லை என்று காட்ட, அதே சமயம் அவன் மனத்தில் ஓர் எச்சரிக்கை மின்னல் புறப்பட்டுப் போலீஸ் என்று ஒரு கூச்சல் மூளைக்குள் ஒலிக்க, உடனே ஓடினான்.

தர்மராஜன் தம் ரிவால்வரை எடுத்தார்.

(தொடரும்)

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — V**
**ராஜ்மோகன் காந்தி**



# ஒரு முனிவர் முதல்வரானார் 2

**ஸி**. ஆர். முதல்வர் பதவி ஏற்கச் சம்மதிக்கக் கூடும் என்று பத்திரிகைகள் குறிப்பிட்டுஎழுத ஆரம்பிப்பதற்குமுன்பேகோயங்காவும் சிவராமனும் அவரைச் சந்தித்தனர். நேரடியாக அவரை விண்டு கேட்டு விடக் கூடாது என்பதிலும் கவனமாக இருந்தனர். ஒருவேளை ராஜாஜி உள்ளூர சம்மதிக்கத் தயாராயிருந்தால்கூட அவர் தமது சுபாவப்படி வெளிப்படையாக 'முடியாது' என்று சொல்லி விடக்கூடும். எனவே அவருக்கு இதில் ஆர்வம் இருக்கிறதா இல்லையா என்ற அளவுக்குத் தெரிந்து கொள்ள விரும்பினார்கள். பேச்சுக் _ கொடுத்துப் பார்த்ததில், ஸி. ஆர். அருகே ராமாயணப் புத்தகங்கள் இருந்த போதிலும் சென்னை மாகாணத்தை எதிர்நோக்கியுள்ள பிரச்னை பற்றித்தான் அவருடைய கேள்விகள் இருந்தன என்பதை அவர்கள் கண்டனர். பிரச்னைக்குத் தீர்வாக அவர் சொன்ன யோசனைகள், ஜனாதிபதி ஆட்சியும் பிரார்த்தனையும்!

**• ஆளுனரின் முழு ஆதரவு**



கோயங்காவும் சிவராமனும் ஸி. ஆர். சம்மதிப்பார் என்ற நம்பிக்கையுடனேயே திரும்பினர். சி. சுப்பிரமணியம், பட்டாபி ராமராவ் உள்ளிட்ட வேறு சிலரும் அவரைச் சந்தித்துப் பேசிய பின் அவ்வாறே அனுமானித்தனர். ஆயினும் நேரடியாக அவரது சம்மதத்தைக் கோரிய சிலருக்குக் கிடைத்திருந்த பதில் வேறு. ஸி. ஆர். தாம் ரொம்பக் களைப்படைந்து விட்டிருப்பதாகவே அவர்களிடம் தெரிவித்தார். மார்ச் 24 — ஆம் தேதி காமராஜும் சஞ்சீவ ரெட்டியும் நேருஜியைச் சந்தித்தபோது, ராஜாஜியை வற்புறுத்த நடந்த முயற்சி தோல்வி கண்டுவிட்டதாகக் கூறினர். இதுகுறித்து நேரு வருத்தம் தெரிவித்ததாக மறுநாளிதழ் செய்தி வெளியிட்டது. இதற்கிடையில் ஸி. ஆர். குற்றாலத்தில் தமது நண்பர் டி. கே. சி. வீட்டுக்குப் போய் விட்டிருந்தார். ஸ்ரீபிரகாசாவின் ஆதரவு இருக்கும் என்ற தைரியத்தில் குமாரசாமிராஜா, கோயங்கா, சி. சுப்பிரமணியம் ஆகியோர் தீவிரமாக உழைத்தனர். மார்ச் 29 — ஆம் தேதி சட்டசபை காங்கிரஸ் கட்சியினர் ஸி. ஆர். தங்களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்ல வேண்டும் என்று ஏக மனதாகத் தீர்மானம் நிறைவேற்றினர். அதோடு, இந்தச் செய்தியுடன் ஸி. ஆரைச் சந்திக்குமாறு ஒரு தூதுக் குழுவுக்கு அதிகாரமும் வழங்கினர். அந்தக் குழுவில் குமாரசாமிராஜா, காமராஜ், சஞ்சீவ ரெட்டி ஆகியோர் இருந்தனர்.

குற்றாலத்திலிருந்து ஸி. ஆர். திரும்பி வரக் காத்திருந்தவர்போல் அவருடைய பஸ்லுல்லா சாலை வீட்டின் மாடிப்படிகளில் கிடுகிடுவென்று ஏறிச் சென்றார் குமாரசாமிராஜா. அவர் கரத்தில் ஏகமனதாக நிறைவேறிய தீர்மானம் இருந்தது. மற்ற இருவரும் அவரைப் பின்தொடர்ந்தனர். ''ராஜாஜி'' என்று அழைத்த குமாரசாமிராஜா, ''சென்னை மாகாணத்தை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். ஏகமனதான தீர்மானம் என்ற இந்தக் கோரிக்கையுடன் நாங்கள் வந்திருக்கிறோம்'' என்றார்.

''எனது இந்த வயதில் என்னை ஏன் தொந்தரவுபடுத்துகிறீர்கள்?'' என்று கேட்டார் ஸி. ஆர். ராஜாவைப் பார்த்து. ''நீங்களே தொடர்ந்து பதவியில் நீடிக்கலாமே?'' என்றும் வினவினார். இந்த யோசனை முன்பே காமராஜினால் கூறப்பட்டதுதான். ராஜாவைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துவிடலாம் என்றும் பிறகு அவர் ஒரு துணைத் தேர்தலில் வென்று சட்டமன்ற உறுப்பினர் ஆகிவிடலாம் என்றும் அவர் கூறியிருந்தார்.

''இல்லை, ராஜாஜி! நீங்கள் என் இடத்தை ஏற்க வேண்டும் என்று கோரவே வந்திருக்கிறேன்'' என்று சற்றும் தயங்காது கண்

**• ஆட்சேபணை இல்லை; ஆர்வமும் இல்லை**



ணியமுடன் பதிலளித்தார் ராஜா. ''இப்படியே போனால் நாளை சேலத்தில் ஒரு பிரச்னையென்றால் நான் நகரசபைத்தலைவராக வேண்டும் என்று கூடச் சொல்வீர்கள்'' என்றார் ராஜாஜி. பிறகு மீண்டும் தமது வயதைக் காரணம் காட்டித் தம்மை விட்டுவிடுமாறு கோரினார். ''உங்களுடைய இந்த ஏற்பாட்டுக்கு நேருவின் ஒப்புதல் இருக்கிறதா?'' என்றும் விசாரித்தார்.

இவ்வாறு நேரு பக்கமாகப் பந்தைத் திருப்பி விட்டு விட்டார் ஸி. ஆர். இப்போது சென்னையிலிருந்து சி. சுப்பிரமணியமும் சௌந்தரம் ராமச்சந்திரனும் அடங்கிய தூதுக்குழு நேருவிடம் சென்றது. சட்டசபை காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானத்துடன் வந்து சேர்ந்த அவர்களை மார்ச் 30 — ஆம் தேதி நேரு வரவேற்றுப் பேசினார். அதுவரையில் அவர் ராஜாஜி தலைமை ஏற்பது பற்றி உற்சாகம் காட்டியிருக்கவில்லை. இப்போதும் அவர் மூன்று அம்சங்களை முன் வைத்தார்: 'இப்படிச் செய்யுங்கள் என்று நானாகவே சட்டமன்ற காங்கிரஸ் கட்சிக்கோ அல்லது ராஜாஜிக்கோ யோசனை கூற மாட்டேன். சென்னை மாகாணச் சட்டமன்ற காங்கிரஸ் கமிட்டி எடுக்கும் முடிவுக்கு உடன்படுவேன். ராஜாஜி தலைமை ஏற்கச் சம்மதித்தால் அவர் சட்டமன்றத்தின் அங்கத்தினராக, எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு விரைவில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.'

தூதுக்குழுவுடன் நேரு ஆலோசித்துக் கொண்டிருந்தபோது சென்னை அரசாங்கத்தின் தலைமைச் செயலர் ராமுண்ணி மேனன் மூலமாக ஸி. ஆர். ஒரு செய்தியை ரகசிய சங்கேத மொழியில் நேருஜிக்கு அனுப்பி வைத்தார். ''என்னை ஒருதர்மசங்கடநிலையிலிருந்து விடுவித்து விடுங்கள். உத்தேசிக்கப்பட்டுள்ள பொறுப்பை ஏற்பது என்பது எனக்கு அசாத்தியம்.''

இந்தச் செய்தியை அவர் அனுப்பிய சில மணி நேரத்துக்குள், ஹிந்து, எக்ஸ்பிரஸ் டெலிபிரிண்டர்கள் மூலமாக நேருஜியின் கருத்து ஒன்று ஸி. ஆருக்குக் கிடைத்தது. ''நீங்கள் தலைமை ஏற்க வேண்டும் என்ற கோரிக்கை தொடர்பாக'' என்று ஆரம்பித்து அதில் நேரு தொடர்ந்து கூறியிருந்தார்:

''நான் இரு காரணங்களுக்காகப் பட்டுக் கொள்ளாமல் இருந்து வந்தேன். உங்களை இவ்வளவு பெரிய சுமையை ஏற்குமாறு வற்புறுத்துவது நியாயமல்ல என்று எனக்குத் தோன்றியது ஒரு காரணம். இரண்டாவது காரணம், சென்னை காங்கிரஸ் கட்சி, என்னுடைய உந்துதல் இல்லாமல் தானாகவே ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்பது. என்னைப் பொறுத்தமட்டில் நான் இயல்பாக இந்த யோசனையை ஏற்கிறேன்.''

ஆக, நேரு தமக்கு ஆட்சேபணை இல்லை என்பது போல் தெரிவித்திருந்தாரேயன்றி; ராஜாஜிதான் பொறுப்பேற்க வேண்டும் என்பதில் ஆர்வம் காட்டவில்லை. எனினும் ஸி. ஆரின் ஒப்புதலைப் பெற, நேருவின் இந்தப் போக்கே போதுமானதாக இருந்திருக்கிறது. ஆனால் ஸி. ஆர். விதித்த ஒரு நிபந்தனை, ராஜா, ஸ்ரீபிரகாசா, கோயங்கா முதலியவர்களை மீண்டும் கலக்கத்தில் ஆழ்த்தியது. ''எத்தகைய சூழ்நிலையிலும் என்னால் தேர்தலுக்கு நிற்க முடியாது; இதில் நான் உறுதியாக இருக்கிறேன்'' என்றார் ராஜாஜி.

ராஜாஜியின் இந்தப் பிடிவாதத்தை அனுசரித்துப் போக, அரசியல் சாசனத்திலேயே வழியிருப்பதாகத் தெரிய வந்தது. மேலவை உறுப்பினர் ஒருவர் முதல்வராகப் பணியாற்ற முடியும். ஆனால் நேருவோ, 'சட்டமன்றத்துக்கு ராஜாஜி தேர்ந்தெடுக்கப்படச் சீக்கிரமே வழி காணப்பட வேண்டும்' என்று குமாரசாமி ராஜா அனுப்பிய தூதுக்குழுவிடம் கூறியிருந்தார். ஸி. ஆரின் நிபந்தனைக்கு உட்பட்டு அவரை முதல்வராக்குவது நேருஜியின் விருப்பத்தை மறுதலிப்பதாகும். நேருஜியின் விருப்பத்தை நிறைவேற்றுவதென்றால் ராஜாஜியை இழக்க நேரிடும்! ஸி. ஆரை இழந்தால் காங்கிரஸ் அமைச்சரவை அமையும் என்ற எண்ணத்தையே கைவிட்டு விடவேண்டியதுதான்! ராஜாவும் மற்ற தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர்களும் ஆளுனர் ஸ்ரீபிரகாசாவின் ஒத்துழைப்புடன் முதல் பாதையையே பின்பற்றத் தீர்மானித்தனர். ஸி. ஆரின் நிபந்தனை பற்றி நேருவுக்குத் தெரியவரும் முன்னரே அவசரம் அவசரமாக, திட்டத்தை நிறைவேற்றவும் முற்பட்டனர்.

முதலமைச்சரின் யோசனைப்படி மேல் சபைக்குச் சிலரை நியமிக்கும் அதிகாரம் ஆளுனருக்கு இருந்தது. இலக்கியம், விஞ்ஞானம், கலைகள், சமூகப் பணி போன்ற துறைகளில் அனுபவம் அல்லது சிறப்பான ஞானம் உள்ளவர்களை ஆளுனர் இவ்வாறு நியமிக்கலாம். சமுதாயப் பணி, இலக்கியம் ஆகிய இருதுறைகளையும் பொறுத்தமட்டில் ஸி. ஆருக்கு இவ்விதம் நியமிக்கப்பட எல்லா விதத் தகுதியும் இருந்தது. காபந்து அரசின் முதல்வர் குமாரசாமிராஜா அவ்வாறே ஆளுனருக்கு ஆலோசனை வழங்க, ஸ்ரீபிரகாசா ராஜாஜியை நியமித்தார்.

ஏப்ரல் பிறந்த போது, ''ஸி. ஆர். தலைமை ஏற்கிறார்'' என்று தலைப்பிட்டு ஹிந்து செய்தி வெளியிட்டது. ''ஸி. ஆர். சரி என்று சொல்லிவிட்டார்'' என்று குமாரசாமிராஜா கூற, சட்டமன்ற காங்கிரஸ் கட்சி விண்ணதிரும் கோஷங்களுடன் அச்செய்தியை வரவேற்றது. அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கும் தீர்மானத்தை காமராஜ் முன்மொழிய, சஞ்சீவ ரெட்டி ஆமோதித்தார். நீடித்த கரகோஷத்துடன் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. மறுநாள் ஆளுனர் ஸ்ரீபிரகாசா ராஜாஜியை மந்திரி சபை அமைக்குமாறு கேட்டுக் கொண்டார்.

(தொடரும்)

# தன்னம்பிக்கை



ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னுல் இயலாது என்று ஒரு நாளும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள். எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும் போது ஆணே, பெண்ணே வரலாற்றில் சிறப்புடன் விளங்கினுர்கள் என்ருல் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கைதான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிருர்.

ஆனுல் நம்மில் பலர் ஓரளவு கல்வித் தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத் தயங்குகிருர்கள்.

தவருகப் பேசி விடுவோமோ என்ற பயமும், முறையான பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான முக்கியமான காரணங்களாகும்.

உங்களது இத்தயக்கத்தைப் போக்கி நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத விவேகானந்தா கல்வி நிலையத்தினர் தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிருர்கள். நேர்முகப் பயிற்சியும் உண்டு. இப்பயிற்சியைப் பற்றி மேலும் தகவல் அறிய விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்குக் கடிதம் எழுதி இலவசமாக தகவல் புத்தகத்தைப் பெற்றுப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாமே!

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**
9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-600 017

• பெண் குழந்தை பிறந்துள்ளது எனக் கூறிய துமே முகம் சுளிப்பதும், மருத்துவப் பரிசோதனை செய்து பெண் கரு என அறிந்தவுடன் அதைக் கருவிலேயே சிலர் அழித்து விட எண்ணும் இத்தருணத்தில் ஓர் அநாதைப் பெண் குழந்தையைத் தத்து எடுத்து அன்பைப் பொழிந்து வளர்த்து வரும் ராதிகா — சுந்தர் ராஜன் தம்பதியை எப்படிப் பாராட்டுவது என்றே எங்களுக்குத் தெரியவில்லை.

திருப்பூர் — 1. பி. டி. அரசு. சரோஜா அரசு.

• 'பெற்றால்தான் பிள்ளையா' அட்டைப் படக் கட்டுரை மிகவும் அருமை. 'சுந்தரராஜன்—ராதிகா தம்பதியர் கூறியிருக்கும் வார்த்தைகள் நூற்றுக்கு நூறு உணர்ச்சி பூர்வமாக அனுபவித்துக் கூறியவை என்பதை, அவர்களைப் போலவே பெண் குழந்தை ஒன்றினைத் தத்தெடுத்து வளர்த்து வரும் எங்களைப் போன்றவர்களால் மட்டுமே உணர முடியும். ஆம். கர்ணப் பிரயாக் (Adoption Centre) எங்களுக்கு வழங்கிய பெண் செல்வம் 'அர்ச்சனா மீனாக்ஷி'தான் எங்கள் இருண்ட வாழ்க்கைக்கு ஒளி விளக்கு. பயனுள்ள இக் கட்டுரையை வெளியிட்ட தங்களுக்கு எங்கள் மனம் நிறைந்த நன்றி.

சிறுமுகை. ஜி. ஆறுமுகசாமி.

# அவர்களுக்கு எங்கே நேரம்?

• உறவிலே தத்து எடுத்துக் கொள்வதை விட ஆதரவற்ற அனாதைக் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்வது அருமையான வழி. குழந்தையற்ற தம்பதியர் இவர்களைப் பின்பற்றினால் நம் நாட்டில் அனாதைகள் என்று அழைக்கப்படும் குழந்தைகளின் எண்ணிக்கை குறையும். இத் தம்பதிக்கும் இவர்களைத் தமிழக மக்களுக்கு எடுத்துக் காட்டிய கல்கி —க்கும் எனது பாராட்டுக்கள்.

ஆற்காடு. டி. உமாபதி.

• 'மக்களின் அறியாமை அரசியல்வாதிக்கு ஆதாயம்' என்ற தங்கள் தலையங்கம் அட்சர லட்சம் பெறும். தேசிய நலனைக் கருத்தில் கொண்டு, சமுதாய நோக்குடன் எழுதப்பட்டுள்ளது. மக்களின் அறியாமையையே மூலதனமாக வைத்து அரசியல் நடத்துவோரால் எப்படிக் கல்விக் கண்ணைத் திறக்க முடியும்? காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.

கோவை. கே. ஆர். கார்த்திகேயன்.

• இந்தியாவைப் பொறுத்தமட்டில் நாட்டு நலனில் அக்கறை கொண்டுள்ள அரசியல்வாதிகளுக்கு எங்கே போவது? எல்லாரமே சுயநலவாதிகள். நாடும், மக்களும் எக்கேடு கெட்டால் அவர்களுக்கு என்ன? அவர்களுக்குப் பணம் ஒன்றுதான் குறிக்கோள். பணம் சம்பாதிக்கத்தானே அரசியலுக்கு வருகிறார்கள். தொண்டு செய்வதற்கும் — மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் அவர்களுக்கு எங்கே நேரம் இருக்கிறது?

கோவை. ஃபிர்தௌஸ் பாரதி நஸீர்.

• 'விமர்சகர்களுக்கும் விருது' என்ற கட்டுரையில், நாரத கான சபா இசை விழாவை நடத்துகிறது என்ற செய்தி தவறாகும். ஞானாநந்தா சங்கீத சம்மேளனம் என்கிற அறக்கட்டளை நடத்துகிற இந்த விழாவில், நாரத கான சபா அறக்கட்டளையும் இணைந்து, விழாவை வெற்றிகரமாக நடத்த உதவுகிறது. நாம சங்கீர்த்தனத்தில் பங்கேற்பவர்களுக்கு மட்டுமே இவ்விழாவில் வாய்ப்பளிக்கப்பட்டிருக்கிறது என்பது அவ்வளவு சரியல்ல. மற்ற வித்துவான்களை இவ் விழா புறக்கணிக்கவில்லை. முக்கிய வித்துவான்களைக் குறிப்பிடும் போது, செம்மங்குடி, டி. கே. பட்டம்மாள், லால்குடி ஜெயராமன், மாண்டலின் சீனிவாஸ், பி.வி. ராமன் — லட்சுமணன், ராஜமய்யர், வி. ராமச்சந்திரன், வி. வி. எஸ், ஜி. எஸ். மணி ஆகியோரையும் நீங்கள் குறிப்பிட்டிருக்கலாம்.

சென்னை — 18. ஆர். கிருஷ்ணசாமி. செயலர், நாரத கான சபா.

• 'உண்மை அலைகள் உயரட்டும்' என்ற வாலியின் கவிதை வரிகள் அற்புதம். சிறிய கவிதை ஆயினும் சிந்தையை விட்டு அகலவில்லை. வாலியின் அற்புத வரிகளுக்கும் அழகான புகைப்படம் தந்திட்ட அமித் குண்டுவுக்கும் பாராட்டுக்கள்!

சென்னை — 41. மேலை. பழ. நாகப்பன்.

• கல்கி வாசகர்கள் கலைஞரைப் பெருவாரியாக ஆதரித்து எழுதியிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளீர்கள். இந் நாட்டு வாக்காளர்களில் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் மிக மிக அதிகம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

திருப்பூர். பா. சு. மணிவண்ணன்.

• பத்மாசேத் அவர்களைப் பற்றிய கட்டுரை படித்தேன். 'எதையும் பொருட்படுத்தாமல் காரியமே கண்ணாக இருந்தோமானால் முணுமுணுக்கிறவன் பேச்சு நம்மை என்ன செய்ய முடியும்?' என்ற அவரின் தன்னம்பிக்கையான வரிகள் என்னைச் சிலிர்க்க வைத்தன.

திருவாய்மூர். மதுமலர்.

• மனித ஒளி வட்டம் பற்றிய மருத்துவக் கட்டுரை மிக அருமையான, அதே நேரம் யாரும் வெளியிடாத புதிய கட்டுரை. டாக்டர் ரமேஷ் சிங் சவான் அவர்களுக்கு எங்களது நன்றி. வெளியிட்ட 'கல்கி' இதழுக்கு வாழ்த்துக்கள். தொடர்ந்து இதே போல் வெளியிட வேண்டுகிறேன்.

வெம்பாக்கம். கு. கன்னியப்பன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 380/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

தத்ரூப இயற்கை வர்ணம், அங்கே நீங்கள் அரங்கிலிருப்பது போலவே இருக்கும்.




# PHX TRENDSET

## ஒலிம்பிக் ஸ்டார்

இப்போது, ஸியோல் நகருக்கு வெளியே நடைபெறும் ஒலிம்பிக்ஸை நீங்கள் உங்கள் வீட்டில் அமர்ந்தபடியே கண்டு களிக்கலாம்—உறுதுணை நவீனப் பொலிவுள்ள புதிய வெர்ட்டிகல் PHX டிரெண்ட்செட். இதனை நெருங்கி உற்று நோக்குவீரானால் புரியும்...

சிறுநுட்ப உத்தியாகிய குரோம் ஸர்க்யூட், வர்ணங்களை நிரந்தர இயற்கைப் பண்போடு நிலைபெறச் செய்கிறது.

இதுநாளையப் புதுநவீன ஆடியோ தொழில்நுட்பம், 12 வாட் உச்ச அவுட்புட் நிலையிலும் தெள்ளத் தெளிவான ஒலி வழங்குகிறது.

வேறெந்த டெலிவிஷன் செட்டையும் விட மேம்பட செயல்படுவதற்கென ஆறு இதர ஆட்டமேட்டிக் சிறப்புகள் அடங்கியது PHX ஒலிம்பிக் ஸ்டார்.

மேலும், எப்போதேனும் சர்விஸிங் உங்களுக்கு தேவைப்படுமானால், பிலிப்ஸ்- பயிற்சிபெற்ற தொழில் வல்லுனர், ஃபோன் மூலம் கூப்பிடு தூரத்திலே எட்டுகிறார் உங்களுக்கு. புதிய PHX டிரெண்ட்செட். இதனை நெருங்கிப் பார்வையிடுங்களேன்.



*தவிர, PHX 20Cயும் கிடைக்கிறது.*

**பைகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

இது ஹாலந்து நாட்டு N.V. பிலிப்ஸ் கம்பெனியின் இணை நிறுவனமாகும்.

* 1988 ஒலிம்பிக்ஸின் அதிகாரபூர்வமான ஏற்பாட்டு ஆதரவாளர்கள்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka